# மூன்று நாடகங்கள்

டாக்டர் மு. வரதராசன்
சென்னை - 30

விற்பனை உரிமை:
பாரி நிலையம்
59, பிராட்வே, சென்னை-1.

விலை ரூ. 1=50

## குறிப்பு

'இளங்கோ' நாடகம் கி. பி. மூன்ரும் நூற்ருண்டில் சிலப்பதிகாரம் இயற்றிய ஆசிரியரைப் பற்றிய கற்பனே. 'திலகவதியார்' சேக்கிழாரின் காவியத்தை ஒட்டி அமைந்தது; அது கி. பி. ஏழாம் நூற்ருண்டைச் சார்ந்தது. கி. பி. பதிஞென்ரும் நூற்ருண்டில் ஆண்ட சோழ வேந்தன் இராசேந்திரன் வாழ்வைப் பற்றிய கற்பனே 'வீண் கனவு' என்பது.

மு. வ.

# பொருளடக்கம்

## காட்சி: 1

[ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகளுக்குமுன்; சேர நாட்டில் வஞ்சிமா நகரை அடுத்த பூங்கா; துறவிகள் சிலர் தம்முள் பேசிக் கொள்கிறார்கள்.]

**துறவி-1 :** அடிகள் இந்த ஊருக்குப் புதியவராக வருகிறீர்களோ?

**துறவி-2 :** இல்லை. முன்பு ஒருமுறை வந்தது உண்டு.

**துறவி-1 :** குணவாயில்கோட்டம் எங்கே இருக்கிறது? அடிகளுக்குத் தெரியுமோ?

**துறவி-2 :** அடிகள் போய்ப் பார்த்ததில்லையோ?

**துறவி-1 :** இல்லை. யான் புதியவன்.

**துறவி-3 :** (அமைதியாய்க் கண்ணை மூடிக்கொண்டிருந்தவர் கண் விழித்துப் பேசுகிறார்.) அதோ அந்த ஊருணியின் பக்கமாகப் போய் அங்கே தோன்றும் தென்னந் தோப்பைக் கடந்து சாலை வழியாகச் சிறிது தொலைவு சென்றால் குணவாயில் கோட்டம் தெரியும். அங்கே போய்ப் பார்க்க வேண்டியது என்ன உள்ளது? வீண் வேலை.

**துறவி-1 :** கோட்டத்தைப் பார்க்க அல்ல; இளங்கோவடிகளைப் பார்த்துவர; தெரிந்துகொள்ளலாம் அல்லவா?

**துறவி-3 :** துறவிகள் அங்கே போகாமல் இருப்பதே நல்லது

**துறவி-2:** என்ன அடிகள் அப்படிச் சொல்கிறீர்களே! இளங்கோவடிகள் நாடு அறிந்த துறவி; அரசபதவியை உதறியவர். அவர் வாழும் கோட்டம்—!

(அப்போது இளந்துறவி ஒருவர் அங்கே வந்து திடுக்கிட்டு நின்று, ஒரு புறமாக ஒதுங்கியபடியே அவர்கள் அறியாமல் கேட்டுக்கொண் டிருக்கிருர்.)

**துறவி-3:** எல்லாம் வெளிமயக்கே; அரச குடும்பத்தில் ஒரு பூனை துறவு பூண்டாலும் ஊர் அறியும்; நாடு அறியும். யானும் நீங்களும் இவரும் துறவு பூண்டால் கேட்பார் இல்லை; போற்றுவார் இல்லை.

**துறவி-1:** அதனுல் என்ன? துறவின் பெருமை எவரால் விளங்கினுல் என்ன?

**துறவி-3:** துறவின் பெருமை விளங்குகிறதா? அவராலேயா? அவர் எழுதிய அந்தக் காவியத்தை அடிகள் படித்தது உண்டோ?

**துறவி-1:** சிலப்பதிகாரந்தானே?

**துறவி-2:** யானும் படித்திருக்கிறேன்.

**துறவி-3:** அதில் துறவறத்தின் பெருமையா விளங்குகிறது? சொல்லுங்கள்.

**துறவி-1:** இல்லறத்தின் பெருமையும் விளங்குகிறது.

**துறவி-3:** அப்படிச் சொல்லாதீர்கள். இல்லறத்தின் பெருமைதான் விளங்குகிறது எனச் சொல்லுங்கள். அதுதான் பொருந்தும்.

**துறவி-2:** இறுதியில் கோவலன் தந்தை, கண்ணகி தந்தை, மாதவி, மணிமேகலை எல்லோரும் துறவு பூண்கிருர்களே.

**துறவி-3:** இறுதியில் மட்டும்தான். அவ்வளவுதான். அதுவும் எதற்காக? இல்லையேல் அந்த நூலை நாடு போற்றாது என்று அஞ்சி அவ்வாறு—.

**துறவி-1:** ஏன்? புகார்க் காண்டத்திலும் மதுரைக் காண்டத்திலும் கவுந்தியடிகளை அமைத்து—.

**துறவி-3:** கவுந்தியடிகளையா? இல்லறத்தைப் போற்றுவதற்காக ஒரு துறவியை அமைத்துள்ளார். நினைக்கவும் நெஞ்சம் நாணுகிறது. பேசவும் வாய் கூசுகிறது. "இக் கற்புடைத் தெய்வம் அல்லது வேறு பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலமால்" என்று கவுந்தியடிகள்—ஒரு துறவி—தம் வாயால் கூறியதாக எழுதியுள்ளார். அது ஒரு காவியமா? துறவிகள் படிக்கத் தகுந்த நூலா? அதை எழுதியவர் ஒரு துறவியா? அவர் வாழும் இடம் ஒரு பள்ளியா என்று கேட்கின்றேன். தவறு இருந்தால் சொல்லுங்கள்.

**துறவி-1:** இல்லறத்தில் ஒரு பெண் கற்புடையவளாக வாழ்ந்து விளங்கினால், அதைப் போற்றுவதில் தவறு என்ன?

**துறவி-3:** அதைப் போற்றுவதற்கு எத்தனையோ இல்லறத்தார் இருக்கின்றார்கள். ஒரு துறவிக்கு அதைப் பற்றிக் கவலை என்ன? மனத்தில் பற்று நீங்காத துறவியாக இருந்தால்தான் அப்படி எழுத முடியும். அதனால் தான் வெளிமயக்கு என்றேன்.

**துறவி-2:** பற்று எல்லோருக்கும் நீங்கிவிடுமா? அது ஒரு சிலரால்தான் முடியும்.

**துறவி-3:** போகட்டும். இன்னொன்று பாருங்கள். நாம் எல்லோரும் சமண சமயத்தவர்தானே?

**துறவி-2:** ஆம் அடிகளே!

**துறவி-3 :** நம் சமயத்தில்-அருகன் நெறியில்-நம் உள்ளம் அழுந்தியிருக்க வேண்டுமே அல்லாமல், மற்றச் சமயங் களில் மனம் பற்றலாமோ ?

**துறவி-1 :** நம் சமயத்தில்-சமண சமயத்தில்-மனம் அழுந்தி யிருப்பதும் ஒரு பற்றுத்தானே ? சமயப் பற்று நீங்கா விட்டால் முற்றத் துறக்கும் துறவு ஆகுமோ ?

(ஒளிந்திருக்கும் இளந்துறவியின் முகத்தில் மகிழ்ச்சி.)

**துறவி-3 :** அடிகள் ! நீங்கள் இவ்வாறு கூறுவது எனக்கு வெறுப்பாக உள்ளது ! இது ஒரு பேச்சா ?

**துறவி-1 :** நமக்கு ஏன் விருப்பும் வெறுப்பும் ? நடுநிலையாக நின்று பற்றற்று ஆய்ந்து உண்மை காண்போம்.

**துறவி-3 :** அதுதான் நம் சமயத்தின் சிறப்பு. அதனால் தான் நம் சமயத்தின் உயர்வு கண்டவர்கள் மற்றச் சமயங்களை மதிப்பதில்லை.

**துறவி-1 :** மற்றச் சமயத்தவர்களும் இதே காரணம்தான் கூறுகிறார்கள்.

**துறவி-3 :** அவர்கள் அறியாமையால் கூறுகிறார்கள். யான் அனுபவத்தால் சொல்கிறேன், நம்புங்கள். யான் சைவனாகப் பிறந்தவன் ; பௌத்த நெறியில் உழன் றவன் ; உண்மை உணர்ந்தது சமண சமயத்தில்தான். அதனால்தான் துணிந்து சொல்ல முடிகிறது.

**துறவி-2 :** (ஊக்கத்துடன் நிமிர்ந்து உட்கார்ந்து) அனுபவத் தால் பெறும் தெளிவுக்கு நிகர் இல்லை அடிகள் !

**துறவி-3 :** சிலப்பதிகாரத்தில் போற்றப்படாத சமயம் எது சொல்லுங்கள்.

**துறவி-1 :** ஆம் ! எல்லாவற்றையும் போற்றி எழுதியுள் ளார்.

**துறவி-3 :** ஒன்றும் அறியாதவர்களே எல்லாவற்றையும் போற்றுவார்கள்.

**துறவி-1 :** எல்லாம் அறிந்தவர்கள் ஒன்றையும் தூற்றமாட்டார்கள் என்று நேற்று ஒருவர் சொல்லிச் சென்ருர்.

**துறவி-3 :** யார் அவன் ? (கடுகடுப்போடு)

**துறவி-1 :** அவன் ஓர் அறிவிலி.

**துறவி-3 :** நன்ருய்ச் சொன்னீர்கள் ! அடிகளே! அதுதான் உண்மை. இந்த உரைகல்லே வைத்துக்கொண்டு அந்தச் சிலப்பதிகாரத்தை மதிப்பிட்டுப் பாருங்கள். பொன் அல்ல, போலி எல்லாம் என்பது தெரியும்.

**துறவி-1 :** பொன், உரைகல், மதிப்பு, அனுபவம்! பற்றற்ற உண்மை அனுபவம் !

**துறவி-3 :** அழகுள்ள நங்கை தன் இளமை அழகை, முல்லே முறுவலே, இதழமுதை, பொன்மேனியை ஒருவனுக்குத் தான் நல்க விரும்புவாள். தெளிந்த ஞானியின் மனமும் ஒரு நெறியில்தான் செல்லும் !

**துறவி-1 :** நல்ல உவமை! தெளிவான உவமை! ஞானியின் மனம் ! அனுபவ உண்மை !

**துறவி-3 :** சைவம், வைணவம், வைதிகம், பௌத்தம் எல்லாவற்றையும் போற்றி நூல் எழுதுவதற்கு ஒரு சமணத்துறவி தோன்ற வேண்டுமா ?

**துறவி-2 :** செங்குட்டுவன் மனத்தை மாற்றி நெறிப்படுத்தச் சமண சமயத் தம்பியால் முடியவில்லே.

**துறவி-3 :** நல்ல வேளேயில் நினேவூட்டினீர்கள். மாடலன் என்னும் வைதிக சமயத்தான் வேந்தனுக்குக் குரு. அவன் வேள்வி செய்யச் சொல்கிருன். அரசன் கேட்கின்ருன். இதைப் பெருமைப்படுத்தி எழுதுகின்ருர்

துறவி-சமண சமயத் துறவி-அந்த வேந்தனின் தம்பி. சமணர் கனவிலும் வேள்வியைக் கருதலாமோ?

**துறவி-2 :** ஏன்? பத்தினிவழிபாடும் அத்தகையதுதானே?

**துறவி-3 :** ஆம்! அதற்கு என்ன ஐயம்? நம் நெறியில் பத்தினிவழிபாட்டுக்கும் இடம் இல்லை; அதைப் புகழ்ந்து காவியம் எழுதுவதற்கும் இடம் இல்லை.

**துறவி-2 :** அடிகளைப் போல் உண்மை தெரிந்தவர்கள் உலகம் அறிய எடுத்துரைக்க வேண்டும்.

**துறவி-3 :** யாரிடம் உரைப்பது? அதற்கு ஒரு செல்வாக்கு வேண்டும். அப்போதுதான் சொல்லும் சொல்லுக்கு மதிப்பு உண்டு.

**துறவி-2 :** உண்மைதான் அடிகள்! மதிப்பு இல்லாதபோது வாய் திறவாமல் இருப்பதே நல்லது.

(ஒளிந்திருந்த இளந்துறவி :ஒன்றும் அறியாதவர் போல் அவர்களை அணுகிவருகிறார்).

**துறவி-3 :** வருக அடிகாள்! வணக்கம்.

**இளந்துறவி :** வணக்கம் அடிகாள்!

**துறவி-3 :** எங்கே இப்பக்கமாக?

**இளந்துறவி :** வாளா வந்தேன். வேலை ஒன்றும் இல்லை.

**துறவி-3 :** (மற்ற இருவரையும் சுட்டிக் காட்டி) அடிகள்! இவரும் அவரும் குணவாயில் கோட்டம் பார்க்க வேண்டும் என்று என்னிடம் பேசிக்கொண் டிருந்தார்கள். நல்ல இடம், தவறுமல் போய்ப் பார்க்க வேண்டும் என்று யானும் சொல்லிக்கொண் டிருந்தேன். (துறவி 1, 2-இருவரையும் நோக்கி) இவர் குணவாயில் கோட்டத்தில் உள்ளவர். இளங்கோவடிகளின் சீடர். மிக நல்லவர். இவருடன் சென்றால் தக்க உதவிகள் புரிவார்.

**துறவி 1, 2 இருவரும் :** (இளந்துறவியை நோக்கி) வணக்கம் அடிகாள் !

**இளந்துறவி :** வணக்கம் அடிகாள் !

**துறவி-3 :** (இளந்துறவியை நோக்கி கோட்டத்தில் அடிகள் நலமாக இருக்கிறார்களா? அரண்மனைக்கு அடிக்கடி போய் வருகிறார்களா ?

**இளந்துறவி :** அடிக்கடி போவதில்லை. வேந்தர் அழைத்தால் அங்கே போகிறார்.

**துறவி-3 :** அடிகளுக்கு என் வணக்கம் சொல்லுங்கள். நாளை மறுநாள் நேரில் வந்து வணங்குவேன்.

**இளந்துறவி :** அவ்வாறே சொல்வேன். எல்லோருக்கும் வணக்கம். (போகிறார்).

(துறவிகள் மூவரும் ஒருவரை ஒருவர் திகைப்பும் குழப்பமுமாகப் பார்க்கிறார்கள்).

## காட்சி : 2

[குணவாயில் கோட்டம்; இளங்கோவடிகள் மலர்ந்த முகத்துடன் அமைதியாக எதையோ எண்ணிக்கொண் டிருக்கிறார்; அவருடைய சீடரான இளந்துறவி அவரை அணுகி எதிரில் நிற்கிறார்.]

**இளங்கோ :** (இளந்துறவி நிற்பதைக் கண்டு) என்ன! ஏதாவது சொல்ல வேண்டுமா?

**இளந்துறவி :** ஆமாம் அடிகள்!

**இளங்கோ :** என்ன அவ்வளவு புதுமையான செய்தி?

**இளந்துறவி :** ஊருணிக்குப் பக்கத்தில் உள்ள பூங்காவில் ஐந்தவித்தானடிகளையும் புதிய துறவிகள் வேறு இருவரையும் கண்டேன். அவர்கள் என்னென்னவோ பேசிக்கொண் டிருந்தார்கள்.

**இளங்கோ :** ஏதாவது புதிய உண்மைகள், நாம் தெரிந்து கொள்ள வேண்டியவை இருந்தால் சொல்.

**இளந்துறவி :** ஐந்தவித்தானடிகள் உங்களைப் பழித்தும் குறை கூறியும் பேசினார்.

**இளங்கோ :** அவ்வளவுதானே? கவலை வேண்டா.

**இளந்துறவி :** துறவியாக இருந்தும் நீங்கள் சிலப்பதிகாரத்தில் இல்லறத்தையே புகழ்ந்திருப்பதாகவும், சமண சமயப் பற்று இல்லாமல் மற்றச் சாமயங்களையும்

போற்றி எழுதியிருப்பதாகவும் கூறினர். சமணர்க்கு ஆகாத வேள்வியை மாடலன்வாயிலாகப் போற்றி உரைத்திருப்பதாகவும் பழித்தார்.

**இளங்கோ :** விடு விடு, இது இயற்கை. குறைகாண்பதும் குறைகூறுவதும் மனத்தின் இயல்பு. அவர்களை வெறுக்க வேண்டா ; எதிர்க்கவும் வேண்டா. நாள்டைவில் திருந்துவார்கள். வாளா விடுக. எதிர்த்தாலும் வெறுத்தாலும், அவர்கள் திருந்துவதற்கு இடையூறு ஆகும் ; நம் முன்னேற்றத்திற்கும் தடை ஆகும்.

(அப்போது அரண்மனை ஏவலாள் ஒருவன் வணக்கம் கூறித் திருமுகம் ஒன்றைக் கொண்டுவந்து இளந்துறவியிடம் நீட்டுகிறான். அவர் அதை வாங்கிப் பார்த்து இளங்கோ வடிகளிடம் கொடுக்கிறார். அவர் அதைப் பிரித்துப் படித்துப்பார்த்துப் புன்முறுவலுடன் ஏவலாளைப் பார்த்துச் சொல்கிறார்.)

**இளங்கோ :** மாலையில் யான் வருவதாக வேந்தரிடம் சொல்.

**ஏவலாள் :** வணக்கம் அடிகளே ! (திரும்பிப் போகிறான்.)

**இளந்துறவி :** அப்படியானால் உலகம் உண்மை உணர்வதற்கு வழி இல்லாமல் போகுமே.

**இளங்கோ :** வெறுப்பதாலும் எதிர்ப்பதாலும் உலகம் உண்மையை உணர்ந்துகொள்ளுமா ? அவற்றால் மக்களிடையே பிளவுகள் பிரிவுகள் உண்டாகலாம் ; அவ்வளவுதான்.

**இளந்துறவி :** அடிகளே ! என் மனத்துக்கு அமைதி கூற முடியவில்லையே.

**இளங்கோ :** எது பற்றி ?

**இளந்துறவி :** நீங்கள் இல்லறத்தைப் புகழ்ந்ததற்கும் மற்றச் சமயங்களைப் போற்றியதற்கும் காரணம்—.

**இளங்கோ :** உனக்கு ஐயம் எழுந்தால் கேள், சொல்கிறேன். அவர்களை எதிர்ப்பதற்கு என்றும் வெறுப்பதற்கு என்றும் கேட்காதே. எதிர்த்துச் செல்வது எப்போதும் எளிமை. இயைந்து செல்வதே அருமை. செயற்கு அரிய செய்யப் பழகு.

**இளந்துறவி :** அவ்வாறே அடிகள்!

**இளங்கோ :** இல்லறம் துறவறம் இரண்டும் உலகிற்கு வேண்டியவை. எந்தக் காலத்திலும் உலகில் இல்லறத்தை ஒழிக்க முடியாது. அதை நோக்கிக் கண்ணை மூடிக்கொள்வதால் பயன் இல்லை; அது கோழைத் தன்மை. துறவியும் இல்லறத்தார்க்கு வழிகாட்டி வாழ்விப்பதே கடமை.

**இளந்துறவி :** சமண சமயப் பற்று—?

**இளங்கோ :** தொடக்கத்தில் பற்று வேண்டியதுதான். அப்போது மற்றச் சமயங்கள் பொய்யாய்ப் போலியாய்த் தோன்றும். யானும் தொடக்கத்தில் மற்றச் சமயத்தாரைப் பழித்து வாழ்ந்தேன்; அண்ணனாகிய வேந்தரையும் யான் வெறுத்திருந்த காலம் உண்டு. ஆனால் உண்மை தெளியத் தெளிய, சமய வேற்றுமைகள் குறைந்து குறைந்து ஒற்றுமையுணர்வே வளர்கிறது. சமய உண்மைகள் வேறு; சமயச் சடங்குகள் வேறு. உண்மைகளை உணர்ந்து ஒழுகுவோமானால், சமயப் பொதுமையே விளங்கும். இல்லையானால் சமயச் சடங்குகளால் வேறுபாடுகளே மிகுதியாகப் புலப்படும். சமயப் பொதுமையை மக்களிடையே பரப்புவதே நம் கடமை. இல்லையானால், நாளடைவில் கண்மூடி வழக்கங்கள் பெருகி, நெறிகளில் மாசு படிந்து, நாத்திகம் வளர்ந்துவிடும். அந்த நிலை வந்தால், இன்று ஒன்றை ஒன்று பழிக்கத் தொடங்கும் சமயங்கள் எல்லாம் ஒரு

சேர எள்ளி நகையாடப்படும். சிலர் இன்று உடனே பெறும் பயனை மட்டும் நாடுகிறார்கள். என் மனம் நாளை நின்று விளையும் பயனையே நாடுகிறது. அதனால் தான் காவியத்திலும் பொதுமை திகழுமாறு எழுதினேன்.

**இளந்துறவி :** அவர்களின் பேச்சைக் கேட்டு யான் வருந்தினேன், உங்கள் உள்ளம் வருந்தவில்லையே !

**இளங்கோ :** எனக்கும் வருத்தம் உண்டு. ஆனால் அவர்கள் மேல் வருத்தம் இல்லை. அவர்கள்மேல் இரக்கம்தான் தோன்றுகிறது.

**இளந்துறவி :** வருத்தம் என்ன அடிகளே !

**இளங்கோ :** திருவள்ளுவர் போன்ற பெருமக்களையும் உன்னையும் என்னையும் வளர்த்துப் பண்படுத்தும் தாய் மொழியாகிய தமிழையும் இந்தத் தமிழ் நாட்டையும் நினைத்துத்தான் வருந்துகிறேன்.

**இளந்துறவி :** விளங்கவில்லை அடிகளே !

**இளங்கோ :** ஒரு நாட்டில் வழிகாட்டும் அறிஞர்களிடமும் தலைவர்களிடமும் பொறாமை வாழ்ந்தால், அந்த நாடு வாழாது. ஐந்தவித்தானடிகள் போன்ற அறிஞர்களிடமும் தமிழகத்தை ஆளும் தலைவர்களிடமும் பொறாமை காணும்போதெல்லாம் எனக்கு அந்த வருத்தம்தான் தோன்றுகிறது. நம்மை எல்லாம் வளர்த்துப் பண்படுத்திவரும் தமிழ்மொழியும் தமிழகமும் எப்படி ஓங்கி வாழப் போகின்றன என்று கவலைப்படுகிறேன். பொறாமை ஒரு நச்சுப் பாம்பு. அதன் நஞ்சு ஏறினால் நாடும் மொழியும் நலிந்து போகுமே !

## காட்சி : 3

[வஞ்சிமா நகரில் வெள்ளிமாடம் என்னும் அரண்மனையின் உட்புறம்; ஏவலாள் நிற்கிறான். சிலப்பதிகார ஏட்டுச்சுவடி ஒருபுறம் உள்ளது. வேறு பல ஏட்டுச்சுவடிகளும் உள்ளன. உள்ளே எழுபது வயதுள்ள சேரன் செங்குட்டுவன் மெல்ல உலவுகிறான்.]

**ஏவலாள் :** *வாழ்க எம் வேந்தே !*

**சேரன் :** *என்ன செய்தி ?*

**ஏவலாள் :** *அடிகள் வந்துள்ளார்.*

**சேரன் :** (முகமலர்ந்து) *வரச் சொல்.*

(ஏவலாள் போகிறான். போனதும் இளங்கோவடிகள் உள்ளே வருகிறார்.)

**இளங்கோ :** *வணக்கம் அண்ணா !*

**சேரன் :** *வா தம்பி ! இரு.*

**இளங்கோ :** *அண்ணி நலந்தானே ?*

**சேரன் :** *நலந்தான். நேற்று முதல் ஓய்வாக இருக்கிறேன். ஏதாவது பேசிக்கொண்டிருக்கலாம் என்று அழைத்தேன்.* (இருவரும் எதிர் எதிரே அமைந்த கட்டில்களில் இருக்கின்றனர்.) *நேற்றிரவு வேண்மாளும் யானுமாகச் சிலப்பதிகாரத்தில் வஞ்சிக்காண்டத்தைப் படித்தோம்.*

**இளங்கோ :** ஏன் அண்ணு ?

**சேரன் :** பொழுதுபோக்காகப் படித்தோம்.

**இளங்கோ :** ஏதாவது குறை தெரிந்ததா அண்ணு ?

**சேரன் :** குற்றம் குறை காணவில்லை. கால்கோட் காதையில் (சிலப்பதிகார ஏட்டுச்சுவடியில் ஓர் இடம் தேடிக் கண்டு) "இமிழ்கடல் வேலியைத் தமிழ்நாடு ஆக்கிய, இதுநீ கருதினை ஆயின் ஏற்பவர், முதுநீர் உலகில் முழுவதும் இல்லை" என்று எழுதியிருக்கின்ருய்.

**இளங்கோ :** வில்லவன் கோதை உங்களுக்குச் சொல்வதாக.

**சேரன் :** ஆமாம். இருந்தாலும் உன் கருத்துத்தானே ? உன் காவியத்தில் வரும் வில்லவன்கோதை நீதானே?

**இளங்கோ :** (புன்முறுவலுடன்) ஒருவகையில் உண்மைதான் அண்ணு !

**சேரன் :** அந்த மூன்று அடிகளுக்கு என்ன பொருள் ?

**இளங்கோ :** பொருள் வெளிப்படைதானே அண்ணு! மயக்கத்திற்கு இடம் இல்லையே.

**சேரன் :** உலகத்தையே தமிழ்நாடாக ஆக்கக் கருதினல் அது முடியும் என்று எழுதியிருக்கிருய். தமிழ்நாடு ஆக்குவது என்ருல் எப்படி ?

**இளங்கோ :** நீங்கள் எப்படிக் கருதுகிறீர்கள் அண்ணு ?

**சேரன் :** உலகத்தை வென்று என் ஆட்சிக்கு உட்படுத்தல் என்று கருதினேன். ஆனல்—.

**இளங்கோ :** அண்ணி என்ன சொன்னர் ?

**சேரன் :** உலகத்தை வென்று, தமிழ் மொழியையும் தமிழ்ப் பண்பாட்டையும் அங்கெல்லாம் பரப்பி, மற்ற நாட்டு மக்களையும் தமிழர்களாக்கி, தமிழ் நாட்டின் எல்லையை விரிவடையச் செய்தல் என்று வேண்மாள் கூறினள்.

**இளங்கோ :** அண்ணியின் கருத்தே அழகான பொருள் அண்ணு !

**சேரன் :** அது முடியுமா ?

**இளங்கோ :** நீங்கள் அவ்வாறு கருதினுல், எதிர்ப்பவர் உலகம் முழுவதிலும்—.

**சேரன் :** இல்லை என்றுதான் எழுதியிருக்கிருய். ஆனுல் வேண்மாள் சொன்ன பொருள் வெறுங் கனவாக முடிவதுதான். நான் வென்று ஆள்வது என்ருல் அது முடியும் ; தமிழ் மொழியையும் தமிழ்ப் பண்பாட்டையும் பரப்பித் தமிழ்நாடு ஆக்குவது முடியுமா ?

**இளங்கோ :** முடியும் அண்ணு. செய்யக்கூடியதுதான். இது வரையில் சேர சோழ பாண்டிய மரபில் எந்தத் தமிழ் வேந்தரும் செய்யாத முயற்சி இது. செய்திருந்தால் வெற்றி பெற்றிருக்கலாம். உடனடியாக வெற்றி பெரு விட்டாலும், படிப்படியாகத் தலைமுறை தலைமுறையாக மெல்ல மெல்லவாவது வெற்றி பெற்றிருக்கலாம்.

**சேரன் :** அப்படியா ?

**இளங்கோ :** ஏன் முடியாது அண்ணு ! கங்கைக் கரையில் வாகை சூடினீர்கள் ; வானளாவும் புகழ்பெற்றீர்கள். வெற்றி முழக்கத்தோடு திரும்பினிர்கள். இது சில நாட்களின் ஆரவாரமாக முடிந்தது. இதற்கு முன்பும் கரிகால் சோழன் முதலானவரும் நம் தந்தையும் இவ் வாறு வெற்றிபெற்றுத் திரும்பினுர்கள். அந்த வெற்றி நிகழ்ச்சிகள் எல்லாம் பழங்கதையாய்ப் போயின. உங்கள் வெற்றியும் அவ்வாறு பழங்கதையாய்ப் போய் விடுமே !

**சேரன் :** என்ன செய்திருக்க வேண்டும் ?

**இளங்கோ :** அங்கே சில தமிழ்க் குடும்பங்களைக் குடியேற்றி யிருக்கவேண்டும். அந்தக் குடும்பங்கள் கங்கைக்

கரையில் உள்ள மக்களோடு அன்பாகப் பழகி அவர்களுக்குத் தலைமை தாங்குமாறு செய்திருக்கவேண்டும்; போர்க்களத்தில் தலைமை தாங்குவது நிலையில்லாதது; சிலநாள் செயல் அது. வாழ்க்கைக் களத்தில் தலைமை தாங்குவதற்கு வாளும் வேலும் வேண்டியதில்லை; அறிவும் திறனும் வேண்டும். அறிவும் திறனும் உள்ள சில குடும்பங்களை அங்கே குடியேற்றினால், அவர்கள் அங்கே தமிழைப் பரப்ப முடியும்; தமிழ்க் கலையைப் பரப்ப முடியும்; தமிழ்ப் பண்பாட்டைப் பரப்ப முடியும். தமிழ் இலக்கியத்தைப் பரப்ப முடியும். இவைகள் எல்லாம் பரவினால் அங்கு வாழும் மக்கள் நாளடைவில் தமிழ்மக்களாக மாறிவிடுவார்கள். தமிழ் நாட்டின் எல்லை இமயம் முதல் குமரி வரையில் என்று சொல்லப்படுவதாகும். அதைத்தான் 'இமிழ்கடல்வேலியைத் தமிழ்நாடு ஆக்கிய' என்று குறிப்பிட்டேன்.

**சேரன் :** இதுவரையில் இந்த முயற்சியை எந்த வேந்தரும் செய்ததாகக் காணோம்.

**இளங்கோ :** ஒருவரும் செய்யவில்லை. போர் செய்வது, வாகை மாலை சூடுவது, மறுநாள் திரும்பிவிடுவது—இவ்வளவுதான் நம் முன்னோர் செய்தவை எல்லாம்.

**சேரன் :** (சிறிது பொறுத்து) ஆம்; ஆம். நிலையான தொண்டு அல்ல; அதனால்தான் அடுத்த சில ஆண்டுகளுக்குப் பிறகு கனகவிசயரைப் போல் தமிழரை எள்ளி நகையாடும் மனப்பான்மை வடநாட்டார்க்கு ஏற்படுகிறது. நீ சொல்வது இப்போது தெளிவாக விளங்குகிறது. நம் முன்னோர் ஏன் அவ்வாறு செய்யவில்லை? (தலைகுனிந்து எண்ணுகிறான்.)

**இளங்கோ :** போர் நிகழ்த்தித் தலைகள் உருளச் செய்தல் சிலநாளில் முடியும் வேலை. மொழியைக் கற்பித்துக்

கலைகள் பரவச் செய்தல் பல ஆண்டுகள் செய்யத் தக்க தொண்டு. உணர்ச்சி மிக்க வேந்தர்கள் உடனே விளையும் சிறு பயனை நாடினார்கள்; நின்று விளையும் பெரும் பயனை நாடவில்லை.

**சேரன் :** (சோர்வோடு) இப்போது வருந்துகிறேன். யானும் அத்தகைய நிலைத்த பெரும் பயனை நாடவில்லையே.

**இளங்கோ :** வருந்த வேண்டா அண்ணா!

**சேரன் :** கங்கைக் கரையில், மலையடிவாரங்களில் தமிழ் பேசும் தமிழ்மக்கள் பலர் இன்னும் வாழ்கின்றார்கள். அவர்கள் திருந்தி நாகரிகமாக நம் போல் வாழ்வதற்காவது முயற்சி செய்திருக்கலாம். அதுவும் செய்யத் தவறினேன். எனக்கு வயதும் ஆயிற்று. இனி ஒரு முறை படையெடுப்பது எங்கே?

**இளங்கோ :** இத்தகைய நிலைத்த தொண்டு செய்வதற்கு நல்ல வாய்ப்பு இதுதான். ஏன் எனில், கங்கைக் கரையில் இன்னும் நிலையாக ஒரு மொழியும் கலையும் வேரூன்றவில்லை. அதனால் தமிழ்மொழியையும் கலையையும் இப்போது பரப்ப முடியும். இன்னும் சில ஆண்டுகள் கழிந்தால், அங்கே அந்நாட்டு மக்களுக்குள் இயற்கையாகப் புது மொழியும் கலையும் தோன்றி வளர்ந்து வேரூன்றிவிடும். அதன் பிறகு அவர்களை வெல்ல முடியாது. நம் முன்னோர்கள் காலத்தில் தமிழ் வளர்ந்த சிந்து நதிக்கரையில் இப்போது தமிழே இல்லாமல் மறைந்தது போல், கங்கைக் கரையிலும் தமிழ் இல்லாமல் மறைந்துபோகும்.

**சேரன் :** எல்லாம் நம் தவறுதான்; நம் கடமையைச் செய்யாத தவறுதான்.

**இளங்கோ :** கங்கைக்கரையில் தமிழ் பேசும் மக்கள் இப்போதே வளம் சுருங்கி வாழ்கின்றார்கள். இனியும் இப்

படியே விட்டால், அவர்கள் அங்கே மற்றவர்களுக்கு அடிமைகளாய் வாழ நேரும். அவர்கள் பேசும் தமிழ் இப்போதே சிர்குலைந்த தமிழாக உள்ளது. இவ்வாறே விட்டால், அந்தத் தமிழும் சிதைந்து அழியும்; அந்த இனமும் குலைந்து மறையும்.

**சேரன் :** (துயரத்துடன்) என் உள்ளத்தில் வேல் பாய்ந்தாற் போல் உள்ளது!

**இளங்கோ :** வருந்தவேண்டா அண்ணு! கடமையைச் செய்வோம். நம் காலத்தில் தொடங்கினுல், பின்வருவோர் வெற்றி பெறுவர்.

**சேரன் :** (சோர்வோடு) நல்லது தம்பி!

**இளங்கோ :** எந்த மொழி வாழ்ந்தால் எமக்கு என்ன என்று பரந்த நோக்கோடு விட்டுவிடலாம் அண்ணு! ஆனுல் தமிழர் பிறநாட்டார்க்கு இடம் தருவது போல், தமிழ் மொழியும் மற்ற மொழிகளை அன்போடு வாழவிடும். பிறநாட்டார் தமிழர்க்கு இடந்தராமல் துன்புறுத்துவது போல், பிறமொழிகள் வளர்ந்தால் தமிழைத் தேய்க்கவும் மாய்க்கவும் முயலுமே என்றுதான் அஞ்சுகிறேன். நம்மை எல்லாம் வளர்த்துப் பண்படுத்திய ஒரு செம்மொழி அப்படி ஆகக் கூடாது என்ற கருத்தால்தான் இதைச் சொல்கிறேன்.

**சேரன் :** இதில் என்ன ஐயம்? பரந்த பொது நோக்கம் தமிழன் குருதியில் தோய்ந்துள்ளது. மற்றவர்களுக்குப் பகைநோக்கம் ஒன்றுதானே தெரியும்?

**இளங்கோ :** இந்த நிலையில் விட்டுவிட்டால், கங்கைக் கரையில் தமிழைப் பரப்ப நாம் தவறினுல், அண்ணு, கங்கைக் கரையில் ஒரு புதுமொழி வளர, அதை அவர்கள் போற்றி வளர்த்து இந்த நாட்டில் கொண்டுவந்து பரப்பும் காலம் வரினும் வரும்.

**சேரன் :** கொடுமை !

**இளங்கோ :** கொடுமை அல்ல அண்ணு, அவர்களுக்கு அது கடமை அண்ணு! நாம் ஏன் செய்யவில்லை என்று எண்ணிப் பாருங்கள். உங்களை மட்டும் சொல்லவில்லை. சோழ பாண்டியரும் எண்ணிப் பார்க்க வேண்டும். அவர்கள் முயற்சி எங்கே? அவர்கள் முயற்சி எல்லாம் இங்கு ஒருவரோடு ஒருவர் பகைத்துப் போர்செய்து வெல்வதிலேயே கழிகின்றது.

**சேரன் :** அவர்களைச் சொல்லிப் பயன் என்ன? வழி வழியாக வந்துள்ள தீமை அது. வேண்மாளும் நீயும் மாடலனும் அவ்வப்போது எனக்கு வழி காட்டாம லிருந்திருந்தால், யானும் அதைத்தான் செய்திருப் பேன். கங்கைக் கரையை வெல்வதற்குமுன், காவிரிக் கரையை வெல்லவும் வையைக் கரையை வெல்லவும் முயன்றிருப்பேன்; முயன்று, தமிழ்நாட்டில் தமிழர் தலைகளை உருட்டுவதிலே தனி மகிழ்ச்சி கண்டிருப்பேன்! என்ன செய்வது? அறியாமை!

**இளங்கோ :** அண்ணு! அவர்கள் நோக்கம் வடவேங்கடத் தையும் கடந்து செல்லவில்லையே என்று எண்ணும் போது வருந்துகிறேன். வேங்கட மலை முதல் விந்திய மலை வரைக்கும் வாழும் மக்களை வடுகர், கருநாய்வடுகர், கல்லா வடுகர் என்று சொல்லிச் சொல்லித் தாழ்த்து கிருேம். ஆனல் அவர்களும் தமிழர்தானே? அவர்கள் பேசுவதும் தமிழ்தானே?

**சேரன் :** ஆம்! நான் அவர்களின் பேச்சைக் கேட்டிருக் கிறேன். நாம் ஏழு என்பதை அவர்கள் ஏடு என்கிருர் கள். கோழியைக் கோடி என்கிருர்கள். மாற்றத்தை மாட்ட என்கிருர்கள். கை என்பதைச் செய் என்கிருர் கள். எலும்பு என்பதை எம்மு என்கிருர்கள். இல்,

செவி முதலான சில சொற்களை மட்டும் அப்படியே சொல்கிறார்கள்.

**இளங்கோ :** விந்திய மலையின் அடிவாரம் வரையில் எவ்வளவு பெரிய நிலப் பரப்பு! அவ்வளவு இடங்களிலும் இப்படிப்பட்ட தமிழே பேசுகிறார்கள். அவர்களுக்கு எழுதவும் படிக்கவும் வழிவகுத்தோமா? அவர்களிடையே இலக்கியம் பரவத் தொண்டு செய்தோமா? நாகரிகம் குறைந்த மக்கள் என எண்ணி நகையாடுதல் மட்டும் செய்கிறோம். அவர்களிடையே தமிழைப் பரப்புதல் கங்கைக் கரையில் பரப்புதலைவிட எளிமையானது. பரப்பினால், ஏடு என்று சொல்லாமல் ஏழு என்றே சொல்வார்கள். கோடி என்னாமல் கோழி என்றே சொல்வார்கள். மாட்ட என்னாமல் மாற்றம் என்றே சொல்வார்கள்.

**சேரன் :** உண்மைதான். இது எளிதில் செய்யக்கூடியது.

**இளங்கோ :** இந்தக் கடமையையும் சேர சோழ பாண்டியர் எவரும் செய்யவில்லை. இந்தத் தீவினை வாளா விடாது. நாளை ஒரு காலத்தில், அவர்களின் கொச்சைச் சொற்களே ஒரு மொழியாய் வளர்ந்தாலும் வளரலாம். வளர்ந்து வன்மை பெற்றுவிட்டால், அவர்கள் தமிழரை வெல்லும் வலிய இனமாக மாறினாலும் மாறலாம். தமிழ் வளர்க்கும் மதுரையை அவர்கள் வென்று ஆளும் காலம் வரினும் வரக்கூடும்.

**சேரன் :** (பெருமூச்சுடன்) அந்தோ!

**இளங்கோ :** அவ்வளவு ஏன் அண்ணா? நம்மை அடுத்துள்ள எருமை நாட்டை (மைசூரை) நீங்களோ சோழரோ எட்டிப் பார்ப்பதே இல்லை. திறை பெற்றுக்கொண்டு அனுப்பிவிடுகிறீர்கள். அந்தக் குறுநில மன்னர்களும் திறை செலுத்திவிட்டுத் திரும்பிச்

சென்றுவிடுகின்றார்கள். அங்குள்ள மக்கள் பேசும் தமிழும் வடுகர்பேசும் தமிழ்போல் சிதைந்து வருகிறது. அவர்களுக்காவது எழுத்தும் கல்வியும் வளரச் செய்தால், தமிழ் இலக்கியம் பரவி நாட்டின் எல்லை குறுகாமல் காக்கலாம். இல்லையானால் அங்கும் ஒரு மொழி வளர்ந்து தமிழுக்கு இடையூறாய் வன்மை பெறக்கூடும்.

**சேரன் :** நினைக்க நினைக்க நெஞ்சம் வேகின்றது.

(குனிந்த தலையோடு)

**இளங்கோ :** தமிழர் இப்படிக் கடமையை மறந்து மறந்துதான் சிந்துநதிக்கரையை முன்னரே இழந்தனர்; கங்கைக் கரையை இழந்துவருகின்றனர்; வேங்கடத்துக்கு அப்பால் உள்ள வடுக நாட்டையும் இழக்கின்றனர்; எருமை நாட்டையும் இழக்கப் போகின்றனர். அண்ணா! அஞ்சுகின்றேன். நாம் பிறந்து வாழும் சேர நாட்டையும் தமிழர் இழந்துவிடுவரோ? ஒருகால் வட வேங்கடத்தையும் தென் குமரியையும் தமிழர் இழக்கும் நிலையும் வருமோ?

[சேரன் மயங்கிக் கட்டிலில் சாய்கின்றான். இளங்கோ விரைந்து எழுந்து அவனிடம் செல்கிறார்.]

## காட்சி : 4

[காவிரிப்பூம்பட்டினம்; கடல்கொண்டு அழிந்த பழைய நகரத்தின் சிதைந்த பகுதிகள்; அங்கே இளங்கோவடிகள் கடலை நோக்கியபடி நிற்கிறார்; விம்முகிறார்; பெருமூச்சு விடுகிறார்.]

**இளங்கோ :** *ஏ! கொடுங் கடலே! நீயுமா அருமைத் தமிழகத்தைச் சிதைக்க வேண்டும்? தமிழர் தமக்குள் கனலும் பொறாமை சிதைக்கின்ற சிதைவு போதாதா? வேலியாக அமைந்துள்ள நீயுமா சிதைக்கின்றாய்? அன்று பஃறுளியாறும் குமரிக்கோடும் விழுங்கினாய். பரந்த தமிழகம் தெற்கே குறுகிவிட்டது. உணர்ச்சி மிக்க தமிழர் கடமை மறந்து வாழ்ந்ததால் சிந்துவும் கங்கையும் விந்தியமும் இழந்தனர். அன்று தமிழகத்தின் தெற்குப் பகுதியை விழுங்கிய நீ, இன்று கிழக்குப் பகுதியையும் விழுங்கத் துணிந்தனையா? தமிழக வேந்தர் பொறாமையால் மேற்குப் பகுதியையும் இழக்கத் துணிந்துள்ளனர் போலும்! அந்தப் பொறாமைப் பேயும் நீயுமாக மாறி மாறிச் சிதைக்க முற்பட்டீர்கள். உங்கள் அழிவுவேலையைத் தடுக்கத் தமிழரின் வாளும் பயன்படவில்லை; ஆண்மையும் பயன்படவில்லை. திறனும் ஒற்றுமையுமே வேண்டியவை போலும்! தமிழர் திறன் ஏந்தியவராய் ஒற்றுமை மிக்கவராய் உங்களை என்று எதிர்த்து அடக்கப் போகின்றனர்?*

ஏ! நெடுந்திரைகாள்! எங்கே எமது புகார்? உலகம் ஒருமுகமாய் நோக்கிய அந்தச் செல்வத் துறைமுகம் எங்கே? கண்ணகி தவம் புரிந்த அந்தப் பெருமனை எங்கே? மாதவியின் கலை திகழ்ந்த அந்த அழகிய அரங்கம் எங்கே? கரிகாற்சோழன் அறம் வளர்த்த அந்த அரண்மனை எங்கே? எங்கே? எங்கே! எல்லாம் விழுங்கிவிட்டீர்களே! ஆ! நெடுந்திரைகாள்!

[சிறிது நேரம் கண்மூடிச் சிந்தனையில் ஆழ்ந்து ஏக்கத்தோடு நிற்கிறார். அப்போது பரதவர் சிலர் அங்குச் சிறிய வலைகளுடனும் பறிகளுடனும் வருகின்றனர். அங்கே நிற்கும் துறவியைக் கண்டதும், கைகுவித்து வணக்கம் தெரிவிக்கின்றனர். இளங்கோ கண்விழித்துப் பார்க்கின்றார்.]

**இளங்கோ:** நீங்கள் யார்? இந்த ஊராரோ?

**பரதவர்-1** } ஆமாம் அடிகள்! இந்த ஊரே.
**பரதவர்-2** } நாங்கள் பரதவர், அடிகள்!

**இளங்கோ:** இந்த நகரத்தைக் கடல் கொண்டபோது எங்கே இருந்தீர்கள்?

**பரத-1:** நான் மீன் விற்க மருவூர்ப்பாக்கம் போயிருந்தேன். என் மாமன் இவன் (மற்றொருவனைச் சுட்டிக் காட்டி) மீன் பிடிக்கக் கடலுக்குள் போயிருந்தான்.

**பரத-3:** மீன் பிடித்துக்கொண்டு படகில் திரும்பிவரும் போது பார்த்தோம்; பழைய இடம் ஒன்றும் இல்லை. எப்படி எங்கே கரையேறுவது என்று தெரியாமல் திகைத்தோம். அதோ அப்படி வடக்கே நெடுந் தொலைவு போய்க் கரை ஏறினோம். அங்கிருந்து கரையோரமே நடந்து வந்து பார்த்தோம்; பழைய தெருக்கள் ஒன்றும் காணோம். மருவூர்ப்பாக்கம் முழுவதுமே கடலிலே மூழ்கிக்கிடந்தது.

**பரத-2 :** இப்போதுகூட உச்சிவேளையில் படகில் போகும் போது, அரண்மனையும் கடைத்தெருவும் பெரிய பெரிய மாளிகைகளும் எல்லாம் கடலின் அடியில் தெரிகின்றன.

**பரத-3 :** ஆமாம் அடிகள்! கடலில் அலைகள் ஓய்ந்து அமைதியாக இருக்கும்போது படகிலிருந்து பார்த்தால் பெரிய பெரிய கட்டிடங்கள் தெரிகின்றன. நான் பார்த்திருக்கிறேன்.

**பரத-1 :** பட்டினப்பாக்கத்திலும் எவ்வளவோ அழிந்து விட்டன.

**பரத-3 :** எங்கள் வீடுகள் எல்லாம் முழுகிவிட்டன.

**பரத-2 :** உடைமை எல்லாவற்றையும் அப்படி அப்படியே விட்டுவிட்டு மனைவிமக்கள் எல்லோரும் நெடுந்தொலைவு கடந்து மேற்கே போய்விட்டார்கள்.

**பரத-1 :** எத்தனையோ பேர் கடலில் மறைந்து போய்விட்டார்கள்.

**பரத-3 :** குடும்பம் குடும்பமாக மாண்டுவிட்டார்கள்.

**பரத-2 :** ஊரே அல்லோல கல்லோலப் பட்டுவிட்டது.

**பரத-3 :** பழைய மனிதர்கள் பலரை இன்னும் பார்க்க முடியவில்லை.

**பரத-1 :** எங்கேயாவது போய்க் குடியேறி யிருக்கிறார்களோ? கடலின் கொந்தளிப்புக்கு இரையாகிவிட்டார்களோ? தெரியவில்லை.

**பரத-2 :** பழைய வாழ்க்கை அடியோடு போச்சு!

**பரத-3 :** காவிரிப்பூம்பட்டினத்தின் பேரும் பெருமையும் சீரும் சிறப்பும் எல்லாம் போச்சு!

**பரத-1:** கண்ணகி அம்மா ஊரைவிட்டுப் புறப்பட்டார்களே அன்றைக்கே எல்லாம் போச்சு!

**இளங்கோ:** கண்ணகி உங்களுக்குத் தெரியுமா? பார்த்திருக்கிறீர்களா?

**பரத-1-:** எனக்கும் தெரியும். பார்த்திருக்கிறேன். எங்கள் மாமன் (பரத – 3 ஐச் சுட்டிக் காட்டி) இவனுக்கு அந்த அம்மா குழந்தையாக இருந்த காலம் முதல் கொண்டே தெரியுமாம்.

**பரத-3:** ஆமாம் அடிகள்! மாநாய்கர் விட்டுக்கு நானும் என் மனைவியும் அடிக்கடி போய்வருவது உண்டு. கடல்வேட்டையில் ஒன்றும் கிடைக்காதபோது அந்த வீட்டின் வாசலில் போய் நிற்போம். வள்ளல் அவர் வாரிக் கொடுப்பார். அதனால், எங்கள் மீன்வேட்டையில் எப்போதாவது முத்துச் சிப்பி கிடைத்தால், என் மனைவி அதைக் கண்ணகிக்குக் கொடுக்க வேண்டும் என்று எடுத்து வைத்துக்கொள்வாள். இரண்டொரு முறை நானே போய்க் கண்ணகியின் கையில் முத்து ஒன்று இரண்டு கொடுத்துவந்திருக்கிறேன். அந்த அம்மா அப்போது ஐந்து ஆறு வயசு உள்ள குழந்தை. பச்சை முத்து என்றால் குழந்தைக்கு நிரம்ப ஆசை.

**பரத-1:** சோழ மன்னர் அரண்மனையிலே கூட அவ்வளவு செல்வமாக எந்தக் குழந்தையும் வளரவில்லையாம். அப்படி வளர்த்தார்களாம் அந்தக் குழந்தையை.

**இளங்கோ:** இருக்கலாம்.

**பரத-3:** நானே கண்ணாரப் பார்த்ததுதானே அடிகள். தங்கப் பதுமை போல வளர்ந்தது குழந்தை. கோவல அய்யாவுக்குக் கொடுத்தபிறகும் சீரும் செல்வமுமாக வாழ்ந்தார்கள் எங்கள் தாய்.

**பரத-2 :** புகுந்த வீடும் பெரிய குடும்பம்தான் அடிகள் !

**இளங்கோ :** அப்படித்தான் கேள்விப்பட் டிருக்கிறேன்.

**பரத-2 :** இந்தப் பட்டினத்திலேயே சோழ வேந்தர் குடும்பம் முதலாவது என்ருல், மாசாத்துவான் குடும்பம் தான் அதற்கு அடுத்தபடி ; அவ்வளவு பெரிய குடும்பம் அடிகள் !

**பரத-3 :** ஆனல்,கோவல அய்யா வேறுவகையாக மாறின பிறகுதான், எங்கள் தாய் கண்ணகியைக் கண்ணுல் பார்க்க முடியவில்லை.

**பரத-1 :** அப்போது போய்ப் பார்த்திருக்கிருயா ? மாமா !

**பரத-3 :** பார்த்திருக்கிறேன் ; ஒரே ஒரு முறைதான். அப்போது அந்த அம்மா வீட்டைவிட்டு வெளியே வருவதே இல்லை. எப்படியாவது பார்க்க வேண்டும் என்று வீட்டின் எதிரே பகல் எல்லாம் காத்திருந்தேன். கடைசியில் மனம் இரங்கி என்னைப் பார்க்க வந்தார்கள், பார்த்தேன். எனக்கு அழுகை வந்துவிட்டது. (கண்ணீர் கலங்குகிருன்.) பொன் பூத்த கொடி போல் இருந்த எங்கள் தாய், உடம்பில் ஒரு சின்ன நகையும் இல்லாமல், காலில் சிலம்பும் இல்லாமல், கண்ணில் மையும் தீட்டாமல், நெற்றியில் திலகமும் இல்லாமல், கூந்தலில் மலரும் சூடாமல், வாடி இளைத்து என் கண்ணெதிரே வந்து நின்ருர்கள். நான் ஒன்றும் பேச முடியாமல் அழுதுகொண்டே திரும்பிவந்துவிட்டேன். (கண்ணைத் துடைக்கிருன். இளங்கோவடிகள் அமைதியாகக் கேட்டுக்கொண் டிருக்கிருர்.)

**பரத-2 :** கோவல அய்யாவின்மேல் ஒரு குற்றமும் சொல்ல முடியாது. பொல்லாத காலம் அடிகள் !

**பரத-1 :** தெரியாதவர்கள் மாதவிக்குக் கொடுத்துக் கொடுத்தே செல்வம் எல்லாம் அழித்துவிட்டதாகச் சொல்வார்கள்.

**பரத-2 :** அது பொய், அடிகள்! நாங்கள் எல்லாரும் கண்ணாரப் பார்த்திருக்கிறோம். வந்தவர்களுக்கு, கேட்டவர்களுக்கு, எல்லார்க்கும் இல்லை என்னாமல் வாரி வாரிக் கொடுத்தே செல்வத்தை அழித்தார் அவர்.

**பரத-1 :** பக்கத்து நாட்டிலே பாரி என்று ஒரு வள்ளல் இருந்ததாகச் சொல்வார்கள். கோவல அய்யா நாங்கள் கண்ணாரக் கண்ட வள்ளல். மற்றவர்கள் பொன்னையும் பொருளையும்தான் கொடுப்பார்கள். கோவல அய்யா உயிரையும் கொடுக்கிற வள்ளல். மாதவியிடம் மனம் வெறுத்து வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தாராம்; அப்போது வழியில் எங்கள் சிற்றப்பன் பார்த்துக் கை நீட்டினானாம். இரண்டு காசு எடுத்துக் கொடுத்துவிட்டுத்தான் அப்பால் போனாராம். ஆனால் அப்போது முகம் ஏதோ கலக்கமாக இருந்ததாம்; தெளிவு இல்லையாம். சிற்றப்பன் என்னிடம் வந்து சொன்னான்.

**பரத-2 :** ஏன்? அன்றைக்கு—மணிமேகலைக்குப் பெயர் வைத்தாரே அன்றைக்கு—நாம் எல்லாம் அங்கே போய்ப் பார்க்கவில்லையா? அவரும் மாதவியுமாக இருந்து பொன்னை வாரி வாரி வழங்கினார்களே! அப்படிக் கொடுத்துக் கொடுத்தே அழித்தார் அந்த அய்யா!

**பரத-1 :** செல்வத்தைப் பறிக்கவேண்டும் என்ற எண்ணம் இருந்தால், அப்படி வாரி வாரி வந்தவர்களுக்குக் கொடுக்க மாதவிக்கு மனம் வருமா? கோவல அய்யா

கொடுத்தால், அதைப் பார்த்துக்கொண்டிருக்கத்தான் மாதவிக்கு மனம் வருமா?

**பரத-2:** அந்த மாதவி அம்மா நினைத்திருந்தால், பட்டினத்திலிருந்த அத்தனை பணக்காரரையும் விரலாலே ஆட்டிவைத்திருக்கலாம். அப்படிப்பட்டவர்கள், மதுரையில் நடந்ததைக் கேட்டதும், என்ன செய்தார்கள், பார்த்தாயா? தானும் துறவியானார்கள்; தன் வயிற்றில் பிறந்த கட்டழகியையும் மொட்டை அடித்து ஒரு பகலில் துறவி ஆக்கிவிட்டார்களே! யாருக்கு வரும் இந்தத் துணிவு!

**பரத-1:** அய்யய்யோ! அவர்களைப் பற்றித் தவறாக நினைத்தாலும் ஒருசொல் பழியாகச் சொன்னாலும் இன்னச் சோறு கிடைக்காமல் போய்விடும். உத்தமி, உத்தமி! எல்லாம் எங்கள் கெட்ட காலம்; இந்தப் பட்டினத்தின் கெட்ட காலம்! அவர்களின் மனம் மாறிப் போச்சு; வாழ்க்கை மாறிப் போச்சு; கடலின் கொந்தளிப்பும் இப்படி ஆச்சு; எங்கள் பட்டினமும் போச்சு.

**பரத-3:** ஏல! நமக்குப் பொழுது ஆகுதே!

**பரத-2:** ஆமாம் அடிகள்! எங்களுக்கு விடைகொடுங்கள். வணக்கம்.

**பரத-1** } வணக்கம் அடிகள்!
**பரத-3** } அடிகள்! வணக்கம்.

[இளங்கோவடிகள் வாய்திறந்து ஒன்றும் கூறாமல் கையை உயர்த்தி அசைத்து விடை தருகிறார்.]

## காட்சி: 5

[காவிரிப்பூம்பட்டினம். மரம் செறிந்த சாலையை அடுத்துள்ள ஒரு சத்திரம். இளங்கோவடிகள் "அடும்புகாள் அன்னங்காள் நம்மை மறந்தாரை நாம்மறக்க மாட்டேமால்" என்ற அடியை மூன்று நான்கு முறை சொல்லிக்கொண்டே அங்கே வந்து நிற்கிறார். பிறகு அங்குள்ள புழுதியை மேலாடையால் விலக்கி, அந்த ஆடையை விரித்து அதன்மேல் அமர்ந்து சிறிதுநேரம் கண் மூடிக் கிடக்கிறார். தம் கையில் உள்ள மூட்டையையே தலையணையாக வைத்துப் படுக்கிறார். சிறிது நேரத்தில், முன் வஞ்சிநகர்ப் பூங்காவில் பேசிக்கொண்டிருந்த துறவிகள் அங்கே வந்து சேர்கின்றனர். யாரோ படுத்திருப்பதை ஐந்தவித்தானடிகள் பார்க்கின்றார். வேறு புறமாகப் போய்ப் படுக்கலாம் என்று அப்பால் செல்கின்றார். மற்றத் துறவிகள் இருவரும் தொடர்கின்றனர்.]

***துறவி-1 :*** (ஐந்தவித்தானடிகளை நோக்கி) *என்ன உற்றுப் பார்த்தீர்கள் அந்தத் துறவியை?*

***ஐந்தவித் :*** *குணவாயில்கோட்டத்தில் அந்த இளங்கோ படுத்திருக்கும் போது இப்படித்தான் நீண்ட நெடுங்கோலமாக இருக்கும். அதை நினைத்துப் பார்த்தேன்.*

***துறவி-2 :*** (சிறிது அச்சத்தோடு) *ஒருகால் அவர்தானோ?*

***துறவி-1 :*** (அடக்கத்தோடு) *அருகே சென்று பார்த்து வரட்டுமா?*

**ஐந்தவித் :** வேண்டா ; பேசாமல் படுக்கை போடுங்கள். நான் சொல்கிறேன். அந்த அரண்மனைத் துறவி யாவது, இங்கே வருவதாவது, சேரவேந்தன் அவரைத் தனியே அனுப்புவதாவது, அரண்மனையின் சுக போகங்களை விட்டு அவர் இவ்வளவு தொலைவு நடந்து வருவாரா? கனவா? இப்படி ஒரு பாழடைந்த சத்திரத்தின் மூலையில் திக்கற்றுப் படுப்பாரா? பைத் தியமா? நாம்தான் ஏழைகள். இப்படி ஊர்சுற்றி எளிய வாழ்க்கை வாழ்கிறோம். அவருக்கு என்ன? அவர் ஏன் இங்கே வரப்போகிறார்?

**துறவி-1 :** ஒருகால், தாம் சிலப்பதிகாரத்தில் எழுதியவை உண்மையா என்று அங்கங்கே கேட்டறிந்து தெளிவ தற்காக வரக்கூடும் அல்லவா?

**ஐந்தவித் :** ஒன்றும் பார்க்காமல் கேட்காமலே குணவாயில் கோட்டத்து மூலையில் இருந்தபடியே கோவலன் கண்ணகி மாதவி எல்லாரையும் பற்றி எழுதி முடித்து விட்டாரே. அவருக்கு உண்மையைப் பற்றிக் கவலை என்ன? ஒருகாலும் வரமாட்டார். அவரோடு நெடுங் காலம் பழகிய நான் சொல்கிறேன், கேளுங்கள். பேசாமல் உறங்குங்கள்.

(படுக்கத் தொடங்குகிறார்கள். ஐந்தவித்தானடிகளும் இரண் டாம் துறவியும் உடனே படுக்கின்றனர். முதல் துறவி மட்டும் விரிப்பின்மேல் சிறிதுநேரம் கண்மூடி அமைதி யாய் இருந்தபிறகு படுக்கின்றார்.)

**துறவி-1:** அடிகள் எழுதியதில் உண்மை இல்லாமற் போகவில்லை. நூலைப் படித்தபோது மாதவியைப் பற்றிப் பொய் புனைந்திருக்கிறார் என்றே நானும் கருதி னேன். ஆனால் இந்தச் சிற்றூரில் மாதவியைக் கண் ணால் கண்டவர்களும் பேசிப் பழகியவர்களும் பலர்

உள்ளனர். அவர்களைக் கேட்டுப் பல உண்மைகளைத் தெரிந்துகொண்டேன்.

**ஐந்தவித் :** என்ன சொல்கிறீர்கள்? அந்த அடிகள் எழுதியவை எல்லாம் உண்மை என்று சொல்கிறார்களா?

**துறவி-1 :** அப்படி அல்ல. அவர்கள் சொல்வதைக் கேட்டு எண்ணிப் பார்த்தால், மாதவியைப் பற்றி அடிகள் எழுதியவை பொருத்தமாக உள்ளன.

**ஐந்தவித் :** நான் நம்பவில்லை. வேசி வேசிதான். கோவலன் வேசிப் பித்தன்தான்.

**துறவி-2 :** மன்னிக்கவேண்டும் அடிகள்! யானும் கேட்டுப் பார்த்தேன். கோவலனைப் பற்றி எல்லோரும் நல்லபடியே சொல்கிறார்கள். வள்ளல் என்றும், இரக்கம் மிக்கவன் என்றும், தீமை அறியாதவன் என்றுமே சொல்கிறார்கள்.

**ஐந்தவித் :** அது போகட்டும். புகார்க் காண்டத்தில் மாதவியின் ஆடல் பாடல் அழகு அணிகலன் இவற்றை வருணித்திருக்கிறாரே, அதைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்.

**துறவி-1 :** மிகமிக அழகாக, காவியச்சுவையோடு பொருந்த அமைந்திருக்கிறது.

**ஐந்தவித் :** அதைக் கேட்கவில்லை. பெண்ணின்பம் அறியாதவர் இளங்கோ என்று சொல்கிறார்களே; அறியாதவராக இருந்தால் அப்படி விரிவாக எழுத முடியுமா?

**துறவி-1 :** அப்படி ஒன்றும் சிற்றின்பப் பகுதி அங்கே இல்லையே. லீலைகள், சில அங்கங்களின் விளக்கங்கள் ஒன்றும் இல்லையே. இதைவிடத் தூய்மையாக ஒரு காவியம் எழுத முடியுமா? வடமொழியில்தான் உள்ளதா?

**ஐந்தவித் :** அப்படியா நினைக்கிறீர்கள் ?

**துறவி-1:** சிலப்பதிகாரத்தைப் படித்தால் குணவாயில் அடிகள் தூய ஒழுக்கம் உள்ளவர் என்பதுதான் விளங்கும்.

**ஐந்தவித் :** நான் நேர்மாருக நினைக்கின்றேனே !

**துறவி-1 :** வேறு யாரேனும் மாதவியைப் பற்றி எழுதியிருந்தால், கணிகையர்வீட்டையே ஓவியமாக்கிக் காட்டியிருப்பாரே ; அங்கங்களைப் பற்றி நூற்றுக் கணக்கான அடிகளும் லீலைகளைப் பற்றி ஆயிரக் கணக்கான அடிகளும் எழுதிக் காமரசம் ததும்பச் செய்திருப்பார்களே ! அவற்றிற்கு இடம் உள்ள காவியத்தில் தூய காதலும் விழுமிய கலையும் மட்டுமே விளங்குமாறு எழுதிய பெருமையைப் பாராட்ட வேண்டாவா ?

**ஐந்தவித் :** அணிந்த அணிகலன்களை ஒன்று விடாமல் கூறியிருக்கிருரே.

**துறவி-1 :** அரண்மனையில் பிறந்து வளர்ந்தவர், தம் தாயின் அணிகலன்களைப் பார்த்திருப்பார் ; உடன் பிறந்தாளின் அணிகலன்களைப் பார்த்திருப்பார்.

**ஐந்தவித் :** வாளா உங்களைக் கேட்டுப்பார்த்தேன்.

**துறவி-1 :** பெண் வகையில் அவர்மேல் உங்களுக்கு ஐயமா ?

**ஐந்தவித் :** எனக்கு ஒன்றும் தெரியாது. நூலைப் பார்த்து அப்படிக் கருதினேன்.

**துறவி-1 :** அதற்கு இடமே இல்லை என்றுதான் நான் கருதுகிறேன். அடிகள் ! (இரண்டாம் துறவியைத் தட்டி) நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் ?

**ஐந்தவித் :** அவர் சுழுத்திநிலைக்குப் போய்விட்டார். அதோ குறட்டை விடுகிருரே, கேட்கவில்லையா ?

**துறவி-1 :** உறங்கட்டும் ; களைப்பு என்ன செய்வார் !

**ஐந்தவித் :** இன்னொன்று. நாம் எல்லாம் சேரநாடு, பாண்டியநாடு, சோழநாடு என்றுதானே பேசுகிறோம். தமிழ் நாடு என்று யாரும் சொல்வதும் இல்லை, கருதுவதும் இல்லையே. பெரும்பாலும் மற்ற நூல்களிலும் அப்படித் தானே உள்ளது.

**துறவி-1 :** ஆமாம் அடிகள் !

**ஐந்தவித் :** அவர் மட்டும் ஏன் அடிக்கடி தமிழ்நாடு, தமிழகம் என்று குறிப்பிடுகிறார். தமிழ் என்றால் ஒரு மொழி தானே ? அவர் நூலில் தமிழ்நாடு என்னும் பொருளிலேயே தமிழ் தமிழ் என்று பல இடங்களில் குறிக்கிறாரே ! தமிழ்நாடு என்று ஒரு நாடும் ஓர் ஆட்சியும் இல்லையே. இல்லாததை ஏன் குறிப்பிடவேண்டும் ?

**துறவி-1 :** மூவேந்தரும் ஒன்றுபட்டால் அப்படி ஆகலாம் அல்லவா ?

**ஐந்தவித் :** ஏன் ஒன்றுபட வேண்டும் ? ஆக முடியுமா ?

**துறவி-1 :** நாட்டின் நன்மை கருதி—.

**ஐந்தவித் :** ஒருகாலும் ஆகமுடியாது. உலகம் தோன்றிய நாள்முதல் மூன்று தனி மரபுகள், மூன்று தனி நாடுகள், மூன்று தனி ஆட்சி—எப்படி ஒன்று ஆகமுடியும்?

**துறவி-1 :** ஐம்பத்தாறு தேசமாய், ஐம்பத்தாறு அரசர் ஆண்ட வடநாட்டை மௌரிய வம்சத்தினர் ஒற்றுமைப்படுத்தி ஒருகுடைக்கீழ்க் கொண்டுவரவில்லையா ?

**ஐந்தவித் :** இருந்தாலும் தமிழ்நாட்டில் மூவேந்தர்கள் தம் தம் மானத்தை விட்டு, தம் தம் உரிமையை விட்டு, ஒன்றுபட முடியாது.

**துறவி-1 :** தனி மானத்திற்காகவும் தனி உரிமைக்காகவும் இவர்கள் போராடுவார்களானால், இறுதியில் இந்தத்

*தமிழ்நாடு இவர்களின் ஆட்சியில் இருப்பதும் போய் விடும். தமிழ்நாட்டைத் தமிழர் ஆள வழி இல்லா மல், வடவர் ஆட்சியின்கீழ் விட்டுவிடும் நிலைமை வந் தாலும் வந்துவிடும். இதை நன்கு எண்ணித்தான், அடிகள் மூன்று நாடுகளையும் ஒருங்கே கூறுகிறார்; கயல் புலி வில் மூன்று கொடிகளையும் ஒருங்கே கூறு கிறார்; பிளவோ பிரிவோ வேறுபாடோ அந்த நூலில் காணவே முடியாது.*

**ஐந்தவித் :** (கொட்டாவி விட்டுக்கொண்டே) *அது மட்டும் உண்மைதான். அடிகளின் மனத்தில் தம் அண்ணன், தம் சேரநாடு என்ற பற்று எள்ளளவும் இல்லாமல் பொதுவாக, நடுநிலையாக எழுதியுள்ளார். அதை மட்டும் மறுக்க முடியாது. சரி, உறக்கம் வருகிறது. உறங்கலாம்.*

[இரண்டாம் துறவியின் குறட்டை ஒலி நன்ருகக் கேட் கிறது. சிறிது நேரத்தில் ஒற்றன் ஒருவன் அங்கே வந்து துறவிகள் மூவரும் உறங்குவதைப் பார்க்கின்ருன். அணுகிச் சென்று முகங்களை நோக்குகின்ருன். அப்பால் செல்கின்ருன். இளங்கோவடிகள் உறங்குமிடத்தை அணுகிச் சென்று அவருடைய முகத்தை உற்றுப் பார்க் கின்ருன். சுட்டுவிரலை அசைத்து, ஏதோ கண்டுபிடித்த வன் போல் மகிழ்கின்ருன். உடை முதலியவற்றைக் கவனிக்கின்ருன். இளங்கோவடிகள் அப்போது கனவு கண்டு வாய்வெருவுகின்ருர்; ' நம்மை மறந்தாரை நாம் மறக்க மாட்டேமால் ' என்ற அடியை அவருடைய வாய் மெல்லச் சொல்கிறது. ஒற்றன் சிறிது நகர்ந்து வந்து மெல்ல உட்காருகின்ருன். அடிகள் புரண்டு படுக் கின்ருர். ஒற்றனும் மெல்லப் படுத்துக் கவனிக்கின்ருன்.]

## காட்சி : 6

[மதுரைமா நகரம் ; மேற்குக் கோபுர வாயில் ; இளங்கோவடிகள் அங்கு வருகின்றார் ; ஒற்றனும் பின்தொடர்ந்தபடி தொலைவில் வருகின்றான். அடிகள் வாயிலை அணுகியதும் நிமிர்ந்து நோக்குகின்றார். அங்கு உள்ள கொற்றவைகோயிலைப் பார்க்கின்றார். அங்குச் சிதறிக் கிடக்கும் பல வளையல் துண்டுகளை எடுத்துப் பார்க்கின்றார். போவார் வருவார் அங்கு வளையல் உடைத்துச் செல்வதைச் சடங்காக்கி யிருப்பதை உணர்கின்றார். மீண்டும் வாயிலை நோக்குகின்றார். "கீழ்த்திசை வாயில் கணவனொடு புகுந்தேன், மேல்திசை வாயில் வறியேன் பெயர்கு" என்ற அடிகளை மெல்லச் சொல்கின்றார்; பிறகு பெருமூச்சு விட்டு அந்த அடிகளையே சிறிது உரக்கச் சொல்கின்றார் ; மறுபடியும் சிறிது பொறுத்து, அந்த அடிகளையே, மெல்லச் சொல்கின்றார் ; உருகி நிற்கின்றார். பிறகு மேற்கு வாயிலைக் கடந்து செல்லத் தொடங்குகின்றார். ஒற்றன் அவர் எதிரே சென்று தடுப்பது போல் நிற்கின்றான்.]

**ஒற்றன் :** வணக்கம் அடிகள் !

**இளங்கோ :** ஏன் வழிமறிக்கின்றாய் ?

**ஒற்றன் :** பாண்டியர் அரசவைக்கு நீங்கள் வந்துபோக வேண்டும்.

**இளங்கோ :** ஆணையா ? அழைப்பா ?

**ஒற்றன் :** அரசரின் ஆணை.

**இளங்கோ :** வர இயலாது என்று சொல்.

(ஒற்றன் உடனே கையைத் தட்ட, வீரர் மூவர் வந்து அடிகளுக்கு விலங்கு இட்டு அழைத்துச் செல்கின்றனர்.)

## காட்சி : 7

[மதுரைமா நகர் ; பாண்டியன் அவை ; பாண்டியன் வெற்றிவேற் செழியன் வீற்றிருக்கின்ருன் ; அமைச்சரும் புலவரும் தானைத் தலைவரும் பிறரும் குழுமியுள்ளனர் ; வீரர் மூவர் இளங்கோவடிகளை விலங்கிட்டவாறு அழைத்துவந்து பாண்டியன்முன் நிறுத்துகின்றனர். அங்குள்ள புலவர்கள் மட்டும் எழுந்து வணக்கம் கூறுகின்றனர்.]

**பாண்டியன் :** *அடிகளே ! வருக. வீரர்காள் ! தளை களையுங்கள்.* (வீரர்கள் அடிகளின் கையில் இட்ட விலங்கை அகற்றுகின்றனர்.) *அடிகளே ! அமர்க.*

[இளங்கோவடிகள் சினம் இன்றி அமைதியாக அமர்கின்ருர். அமைச்சரும் புலவரும் அச்சத்தோடு அவரையே உற்று நோக்குகின்றனர்.]

**பாண்டியன் :** காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து நம் ஒற்றன் உம்மைத் தொடர்ந்து வந்தான். செய்திகள் அனைத்தும் அறிவோம். மூன்று நாட்களாக மதுரை நகரில் சுற்றிப் பார்த்து வருகின்றீர். அரண்மனைப் பக்கம் வந்து எம்மைக் காண உமக்குமனம் இல்லை. (தலை அசைக்கின்ருன்.) அதிலிருந்தே மனப்பான்மை நன்கு விளங்குகின்றது. பாண்டியர் மரபின்மேல் உமக்கு உள்ள வெறுப்பு நன்கு விளங்குகின்றது. அதனுல்தான் எம் தந்தை செய்த சிறு தவறு உலகெல்லாம் அறியுமாறு ஒரு காவியம் எழுதித் தூற்ற மனம் கொண்டீர். இன்னும் என்ன செய்யப்போகின்றீர் ?

**இளங்கோ :** (அமர்ந்தவாறே, அமைதியாக, படபடப்பு இன்றி) சேரன் தம்பி என்ற முறையில் யான் மதுரைமா நகர்க்கு வரவில்லை ; சிலம்பு இசைத்த பாவலன் என்ற முறையிலும் இங்கு வரவில்லை ; துறவி என்ற முறையில் வந்தேன். சுற்றிப் பார்த்தேன் ; அதனால்தான் அரண்மனைக்கு வந்து உம்மைக் காணவில்லை.

**பாண்டியன் :** அடுத்த குற்றச்சாட்டு...

**இளங்கோ :** பாண்டியர் மரபைப் பழித்துத் தூற்றுவதற்காக யான் சிலப்பதிகாரம் எழுதியதாகக் கூறினீர். என் நோக்கம் அது அல்ல. கற்பின் பெருமையை—கற்புடைய நங்கையின் தவத்தின் சிறப்பை—அறத்தின் ஆற்றலை விளக்குவதே என் நோக்கம். உம் தந்தை செய்த தவறு என்ன என்பதைப் பலர்வாயிலாகக் கேட்டறிந்தே அதைக் குறித்துள்ளேன். அதையும் நன்கு ஆராய்ந்து, நடுநிலையில் நின்று, என் தந்தை செய்ததுபோலவே கருதி உணர்ந்து எழுதியுள்ளேன். உம் தந்தையின் பெருமையும் பாண்டியர் மரபின் பெருமையும் விளங்கும் வகையிலேயே எழுதியுள்ளேன். வளையாச் செங்கோலை வல்வினை வளைத்தது என்று குறிப்பிட்டுள்ளேன். பாண்டியர் மரபை மதுரைக்காண்டத்தில் பல இடங்களில் போற்றியுள்ளேன். வஞ்சிக்காண்டத்தில் கந்துகவரியிலும் வள்ளைப் பாட்டிலும் பாண்டியர்மரபுக்கு உயர்வு அமைத்துள்ளேன். மூவேந்தர், மூன்று கொடி என எங்கெங்கும் விடாமல் குறிப்பிட்டுள்ளேன். பாண்டியர் மரபுக்குப் பழி நேராமல் எழுதவேண்டும் என்பதே என் நெஞ்சில் எந்நாளும் இருந்துவந்தது. இயன்றவரையில் நடுநிலையில் நின்று எழுதினேன். ஒன்று கூறுகிறேன்: கண்ணகியின் வாழ்வை யான் காவியம் ஆக்காமல் விட்டிருக்கலாம். ஆனால் மக்களின்

மனத்தைக் கவர்ந்த வாழ்வு அது. எங்கேனும் என்றேனும் பிறக்கும் புலவர் ஒருவரின் உள்ளத்தை அது தொட்டே தீரும். அக்காலத்தில் அவர் காவியமாக்கப் புகுந்தால், உண்மை பல மறைந்து, திரிபு பல புகுந்து விடும். அப்போது காவியச் சுவை கருதிப் பாண்டியர் மரபை முற்றிலும் பழித்துத் தூற்றி எழுதினும் எழுதக்கூடும் என்ற அச்சம் என் உள்ளத்தே தோன்றுகின்றது. மீண்டும் கூறுகின்றேன். யான் நடுநிலை பிறழாமல் எழுதியுள்ளேன். பிறப்பால், யான் சேரன் தம்பி; சேரநாட்டான்; ஆயினும் என் உள்ளத்தே சேரநாட்டின்மேல் தனிப்பற்று இல்லை; மற்ற நாட்டின் மேல் வெறுப்பும் இல்லை. என் உள்ளத்தே என் அன்புக்கு உரியதாய் விளங்கும் நாடு, மூன்று பகுதியும் சேர்ந்த தமிழ்நாடு, தமிழகம் ஒன்றுதான்.

**பாண்டியன் :** எம் மரபைப் பழிக்கு இடமாக்கினீர் என்று யாம் அஞ்சவில்லை. அதனால் உம்மைத் தளையிடவில்லை. ஆனால், எம் தந்தையைப் பழித்து எழுதிய ஒருவர் எம் தலைநகரிலேயே மூன்று நாள் திரிந்தும் வாளா விட்டோம் என்ற பழிக்கு அஞ்சினோம். எம் மரபைப் பழித்தவரைத் தடுத்துக் கேட்கும் ஆண்மை உண்டு என்று இன்று உலகிற்குக் காட்டினோம். இது போதும். இனி நீர் போகலாம். போவதற்குமுன் சில சொல்கின்றோம். எங்கள் மரபு சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த மரபு; ஆதலின் தமிழ்மொழி வாழும்வரையில் பாண்டியர் பெருமை வாழும் என்பதை உணர்வீராக. உம்முடைய ஒரு நூல் எம் மரபை மாசுபடுத்த முடியாது.

**இளங்கோ :** பட்ட மாசைத் துடைத்துத் துலக்குவதே என் நூல்.

**பாண்டியன் :** பாண்டியர் இருநிலம் பொது எனப் பொருத மானம் உடையவர் என்பதை அறிவீர். அறிந்திருந் தும் எம் தந்தைக்கோ பாண்டியர் மரபுக்கோ உங்கள் நூலில் தனிச் சிறப்பும் உயர்வும் தரவில்லையே !

**இளங்கோ :** மூவேந்தருள் எவர்க்கும் யான் தனிச்சிறப்பும் உயர்வும் தரவில்லை. செங்குட்டுவனுக்கும் தரவில்லை ; சேரர்மரபுக்கும் தரவில்லை.

**பாண்டியன் :** பாண்டியர் மரபுக்குத் தனிச் சிறப்புத் தந்து போற்ருதவர் பாண்டிய நாட்டின் எல்லைக்குள் கால் வைப்பதே குற்றம். (அழுத்தமாக) அத்தகையவர் பாண் டிய நாட்டிற்கே பகைவர். உணர்வீர்.

**இளங்கோ :** அரசே ! மூவேந்தரும் தனித்தனிச் சிறப்பும் உயர்வும் நாடினுல், பொதுவான தமிழகம் என்ன ஆவது !

**பாண்டியன் :** அதுபற்றி உமக்குக் கவலை ஏன் ?

**இளங்கோ :** அதுபற்றித்தான் எனக்குக் கவலை.

**பாண்டியன் :** ஏன் ?

**இளங்கோ :** மூவேந்தர் மரபுகள் விளங்குவதற்காகத் தமி ழும் தமிழ்நாடும் தோன்றவில்லை. தமிழும் தமிழ் நாடும் விளங்கவேண்டும் என்பதற்காகவே மூவேந்தர் மரபுகள் தோன்றின. ஆகவே இந்த வேந்தர் மரபு களை விடத் தமிழும் தமிழ்நாடும் நீடு வாழ வேண்டும் என்பதே என் கவலை.

**பாண்டியன் :** (எள்ளும் குறிப்போடு) தமிழ்நாடு ! தமிழகம் ! எங்கிருந்து கற்றீர் இந்தத் தொடர்களை ? பாண்டிய நாடு சோழநாடு சேரநாடு என்று பிரித்துத் தனித் தனியே சொல்லுக. இல்லாத ஒன்றைச் சொல்லி மயக்காதீர்.

**இளங்கோ :** மயக்கவில்லை அரசே!

**பாண்டியன் :** ஓ ஓ! நீரே மயங்குகின்றீரோ?

**இளங்கோ :** மயங்கவும் இல்லை அரசே!

**பாண்டியன் :** ஓ! கனவு காண்கின்றீரோ?

**இளங்கோ :** ஆம் அரசே! கனவு காண்கின்றேன். ஒரு காலத்தில் என் கனவு நனவு ஆகும் என்றும் நம்புகின்றேன்.

**பாண்டியன் :** என்ன சொன்னீர்?

**இளங்கோ :** தமிழகம் ஒரு காலத்தில் ஒன்றுபடும் என்று—.

**பாண்டியன் :** அந்நிலையில் பாண்டியன் தலைமை மறைய, சேரனே வடவேங்கடம் முதல் தென்குமரிவரையில் ஆள்வான் என்ற கனவா?

**இளங்கோ :** இல்லை அரசே! சிறிது பொறுமை வேண்டும் அரசே!

**பாண்டியன் :** பொறுக்கத் தகாதது கூறினீர். மூவேந்தர் மரபுகளுள் இரண்டு மரபுகள் அழியாமல் தமிழகம் ஒன்றுபடுமோ? வேறு எப்படி முடியும்? முன்பின் முரண்படப் பேசி மயக்குகின்றீரோ?

**இளங்கோ :** தமிழகம் எப்படியேனும் ஒன்றுபடாவிட்டால், மூன்று மரபும் அழிய நேரும் அரசே!

**பாண்டியன் :** (சீற்றத்துடன் எழுந்து) என்ன கூறினீர்? மூவேந்தர் மரபும் அழியும் என, பாண்டியர் மரபும் அழியும் எனக் கூறினீர்! என்ன துணிவு! என்ன கொடிய குற்றம்! தென்னவன் காவல் அழிவதா? அழிவா! அந்தக் காவியம் எழுதியது பெருங்குற்றம் அல்ல; இதுவே பெருங்குற்றம். இந்த ஒரு சொல் சொன்னதற்காக உம் நாவை எம் வாளால் துணித்திருக்க

வேண்டும். உம் துறவுக் கோலம் கண்டு தயங்கினேன்.

[அமைச்சரும் புலவரும் அஞ்சி நடுங்குகின்றனர் ; அரசன் சிறிது சீற்றம் தணிந்து அமர்கின்றான்.]

**இளங்கோ :** (அஞ்சாமல், அமைதியுடன்) அரசே! என் நோக்கத்தை உணர்ந்தருள்வீர் என்று விரிவாக எடுத்துரைத்தேன். இல்லையேல் முதலிலிருந்தே வாளா வாய்மூடிக் கிடந்திருப்பேன். யான் கூறுவது எல்லாம், தமிழகம் இனியும் பிளந்தும் பிரிந்தும் சிதைதல் ஆகாது என்பது. மூன்று பிரிவுகளுக்கு இடம் கொடுத்தால் முப்பது பிரிவுகள் வாழும் ; முந்நூறு பிளவுகள் வளரும். தமிழகம் மேன்மேலும் குறுகும் ; எல்லை குறுகிக் குறுகிச் சிறு நாடு ஆகும். பிறர் ஆட்சிக்கு உட்பட்டு அல்லலுறும். தமிழ் என்ற மொழியும் தமிழர் என்ற இனமும் மறையும் நிலைமைக்கு இடமாகுமே என அஞ்சினேன். இதைத்தான் கூற முனைந்தேன்.

**பாண்டியன் :** போதும் உம் பேச்சு. இனி வாய் திறவாதீர். இன்னும் அறுபது நாழிகைக்குள் பாண்டியநாட்டு எல்லையை விட்டு நீங்கிட வேண்டும். இல்லையேல் எங்கிருந்தும் எம் நாட்டு மக்கள் உம்மை வாளா விடார். எம் மரபைப் பழித்த உம் நூல் இனி இந்நாட்டில் வாழாதவாறு யாம் செய்ய முடியும் ; செய்வோம். உம் பெயரும் இந்நாட்டார் அறியாதவாறு செய்ய முடியும் ; செய்வோம். உம் நூலும் மறையும் ; உம் பெயரும் மறையும். காண்பீர். இனி ஒரு நொடியும் இங்கு நிற்றல் ஆகாது. அகல்வீர்.

: (எழுந்து நின்று பொறுமையோடும் உருக்கத்துடனும்) தமிழக வேந்தே! தமிழகத் தலைவரே! யான் இப்போதே உடனே அகல்வேன். அறுபது நாழிகைக்குள் பாண்டி நாட்டு எல்லையைக் கடந்து செல்வேன்.

அச்சத்தால் அல்ல, அன்பால், அருளால். என் நூல் மறையட்டும்; என் பெயரும் மறையட்டும். அவை பற்றிக் கவலை இல்லை. யானும் போகிறேன்; மறைகிறேன். யாக்கை நிலை இல்லாதது. போய் மறைவதே இதன் பெற்றி. ஆனால், அருமைத் தமிழ் மறையாமல் வாழ மனம் கொள்வீர்; அருமைத் தமிழகம் மறையாமல் விளங்க மனம் கொள்வீர். சிலப்பதிகாரம் என்று ஒன்று இருந்ததாக நினைவும் இல்லாமல் மறக்கப்படும் காலம் வரட்டும்; ஆயின் தமிழகம் என்ற ஒன்று மறக்கப்படாதிருந்தால் போதும். தமிழ்மொழி மறக்கப்படாதிருந்தால் போதும். அதற்காக வேண்டுகிறேன். தமிழரே! தமிழகத் தலைவரே! தனிச் சிறப்பு, தனிப் புகழ், தனி மானம் இவற்றை நாடாதீர்; தேடாதீர். தமிழை, தமிழகத்தை நாடுவீர், தேடுவீர். பொறாமை வேண்டா; அதனால் விளையும் பிளவும் பிரிவும் வேண்டா; அவை அனைத்தும் தமிழ்க்கும் தமிழகத்திற்கும் இடையூறுகள்; நலிவு செய்யும் நோய்கள். ஆதலின், தமிழகத் தலைவரே! தமிழரே! ஒன்றுபடுவீர்; தமிழ் வாழ, தமிழகம் விளங்க, ஒன்றுபடுவீர். யான் போகிறேன்; மறைகிறேன்; தமிழ் போகாதிருக்க, தமிழகம் மறையாதிருக்க, தமிழரே! வேண்டுவது ஒன்றுதான்; அதுதான் ஒற்றுமை, ஒற்றுமை, ஒற்றுமை—!

[போய்க்கொண்டே இருக்கின்றார். ஒற்றுமை ஒற்றுமை என்ற குரல்மட்டும் கேட்கின்றது.]

# திலகவதியார்

## பாடும் குரல்

### பாட்டு

புகழனார் தமக்குரிமைப் பொருவில்குலக் குடியின்கண்
மகிழவரு மணம்புணர்ந்த மாதினியார் மணிவயிற்றில்
நிகழுமலர்ச் செங்கமல நிரையிதழின் அகவயினில்
திகழவரும் திருஅனைய திலகவதியார் பிறந்தார்.

தம்பியார் உளராக வேண்டும்என வைத்த தயா
உம்பர்உலகு அணையஉறு நிலைவிலக்க உயிர்தாங்கி
அம்பொன்மணி நூல்தாங்காது அனைத்துயிர்க்கும் அருள்தாங்கி
இம்பர்மனைத் தவம்புரிந்து திலகவதி யார்இருந்தார்.

## காட்சி: 1

[திலகவதியார் வீடு. அவருடன் நெருங்கிப் பழகும் பூங்கொடி வந்து அன்புடன் பேசி ஆறுதல் கூறுகிறாள்.]

**பூங்கொடி :** அம்மா திலகவதி! உன் கவலை துயரம் எல்லாம் உணர்கிறேன், ஆனாலும்—

**திலகவதி :** (பெருமூச்சு விட்டு) யார் எவ்வளவு உணர்ந் தாலும் என்ன செய்ய முடியும் அம்மா? நான் வந்த வழி. நான் பட்டுத் தீர வேண்டும். இந்த வயதில் எனக்கு ஈசன் இப்படி—(கலக்கம்.)

**பூங் :** திலகவதி! இப்படித் துயரப்பட்டுக் கலங்காதே. யார் என்ன செய்ய முடியும்? எப்படியாவது நீதான் உன் மனத்தைத் தேற்றிக்கொள்ள வேண்டும்.

**தில :** அதுதான் முடியவில்லை அம்மா. நான் ஒரு பாவி. என்னையும் தம்பியையும் விட்டுவிட்டு—இந்தச் சின்ன வயதில் திக்கில்லாமல் விட்டுவிட்டு—அப்பாவும் அம்மா வும் ஒருவர்பின் ஒருவராகப் போய்விட்டார்களே.

**பூங் :** திரும்பத் திரும்ப அதையே நினைத்து நினைத்துக் கலங்குவதால் பயன் என்ன அம்மா?

**தில :** நான் எப்படி மறப்பேன்? போன மாதம் வரையில் குடும்பவேலை என்றால் என்ன என்று தெரியாதபடி என்னை வளர்த்து வந்தார்கள். திடீரென்று இப்படிப் பிரிந்து போய்விட்டார்களே!

**பூங் :** நினைத்தால் வருத்தமாகத்தான் இருக்கிறது. தம்பி மிகவும் சிறியவன்.

**தில :** அவனை நான் எப்படிக் காப்பாற்றப் போகிறேனோ, தெரியவில்லை. அவனுக்கு ஒன்றும் தெரியவில்லை. இரவில் எதையாவது நினைத்துக்கொண்டு தூக்கத் தில் எழும்போது—'அம்மா அம்மா' என்று அலறிக் கொண்டு அழுகிறான்.

**பூங் :** அய்யோ! இன்னும் அம்மா இருப்பதாகவே நினைக் கிறது அவனுடைய மனம்.

**தில :** பூங்கொடி! (அமைதி)

**பூங் :** என்ன திலகவதி ? ஏன் அப்படிக் கண்ணீர் விடுகிருய் ?

**தில :** தம்பியின் முகத்தில் அடிக்கடி ஏக்கம் இருக்கிறது. அவனைச் செல்வக் குழந்தையாக என் பெற்ரேர்கள் வளர்த்தார்கள். இப்போது அவன் முகத்தில் ஏக்கம் காணும்போதெல்லாம்.—

**பூங் :** இப்படிக் கலங்காதே திலகவதி.

**தில :** தம்பியின் முகத்தைப் பார்க்கும்போதெல்லாம் என் நெஞ்சம் உடைந்துபோகிறது அம்மா. என் கண்ணீரை நிறுத்த முடியவில்லை அம்மா.

**பூங் :** கலங்காதே அம்மா.

**தில :** இன்று காலையில் அவனுக்கு உணவு இட்டபோது அவன் முகத்தைப் பார்த்ததும் என்ன என்னவோ நினைவுகள் வந்துவிட்டன. என் கண்ணீரை அவன் பார்த்தால் அழுது கலங்குவானே என்று ஒன்றும் பேசாமல் தோட்டத்திற்குப் போய்விட்டேன்.

**பூங் :** நீயே இப்படிக் கலங்கினுல், தம்பியை எப்படித் தேற்ற முடியும் அம்மா ? இனிமேல் அப்படிச் செய்யாதே. உன்னைவிட இளமனம் உள்ள அவனுக்குத் துயரம் தோன்ருதபடி காப்பாற்ற வேண்டியது உன் கடமை அல்லவா ?

**தில :** ஆமாம் பூங்கொடி. தெரிகிறது. என்ன செய்வேன் ?

**பூங் :** உன் மனத்தை முன்னே தேற்றிக்கொள்ள வேண்டும்.

**தில :** என்மனம் கேட்கவில்லையே. நான் என்ன செய்வேன் ? இன்னும் ஆறுவாரம் முடியவில்லையே. என்னையும் தம்பியையும் பக்கத்தில் உட்காரவைத்து எங்கள் அம்மா சோறு இட்டுப் பசி தீர்த்தாளே போன

மாதத்தில். அந்த அன்னையின் கை அன்போடு சோறு இட்ட நாள் மாறிவிட்டதே. தம்பிக்கு நான் சோறு இடும் காலம் இப்படி வரும் என்று எதிர்பார்க்கவில்லையே.

பூங் : இப்படி எதை எதையோ எண்ணாதே திலகவதி.

தில : எப்படி அம்மா எண்ணாமல் இருப்பேன் ?

பூங் : திலகவதி ! ஒருவகையில் உன் பெற்றோர் உனக்குச் செய்யவேண்டிய முக்கியமான கடமையை முடித்து விட்டுப் போனார்கள் என்றே சொல்ல வேண்டும்.

தில : எதைச் சொல்கிறாய் அம்மா ?

பூங் : கடவுள் இந்த அளவிற்காவது கருணை செய்தார் என்று ஆறுதல் அடைய வேண்டும் அம்மா. நீ நினைக்கிறபடி பெற்றோர் உன்னைத் திக்கற்றவளாய் விட்டுவிட்டுப் போகவில்லை. உன் வாழ்க்கைக்குத் துணைதேடி, இன்னார் உன் கணவர் என்று ஏற்பாடு செய்துவிட்டுப் போனார்கள் அல்லவா ?

தில : (பெருமூச்சு—அமைதி )

பூங் : திருமணம் செய்யவில்லையே தவிர, மணம் பேசி இசைந்துவிட்டார்கள் அல்லவா ? அதுவே முக்கால் பகுதித் திருமணம் நிறைவேறியதுபோல்தானே ? அவர் எப்போது வருவார் அம்மா ?

தில : எனக்குத் தெரியாது, பூங்கொடி.

பூங் : இப்போது எங்கே இருக்கிறார் ?

தில : அரசருடைய ஆணையால் போர்க்களத்துக்குப் போனவர் இன்னும் அங்கேயே இருக்கிறாராம்.

பூங் : அப்படியானால், இன்னும் போர் முடியவில்லை என்று சொல்.

**தில :** அப்படித்தான் தெரிகிறது.

**பூங் :** போர் முடிந்ததும், விரைவில் திரும்பி வருவார். வந்ததும் உனக்குத் திருமணம் நடக்கும். அதன் பிறகு, உன் வாழ்க்கையில் ஒரு குறைவும் இருக்காது. தம்பியும் சில ஆண்டுகளில் வளர்ந்து பெரியவனாகிவிட்டால், அவனுக்கு ஒரு குடும்பம் ஏற்பட்டுவிட்டால், பிறகு எல்லாம் நல்லபடி நடக்கும் அம்மா—வீணாகக் கலங்காதே.

**தில :** பூங்கொடி! அதோ தம்பி வருகிறான். இந்தப் பேச்சு அவன் செவியில் விழவேண்டா. அம்மாவைப் பற்றி யார் என்ன பேசினாலும் அவன் முகமே மாறிவிடுகிறது.

**பூங் :** அய்யோ! அவன் மனம் என்ன என்ன எண்ணி ஏங்குகிறதோ?

**தில :** மெல்லப் பேசு.

**மரு :** அக்கா!

**தில :** எங்கே போய் வந்தாய் தம்பி? பசிக்கிறதா? சாப்பிடுகிறாயா?

**மரு :** சாப்பிடுவேன். இன்னும் கொஞ்சம் நேரம் ஆகட்டும். பூங்கொடி அக்கா இப்போதுதான் வந்தார்களா?

**பூங் :** நான் முன்னமேயே வந்தேன் தம்பி, உன்னைத்தான் காணோம். எங்கே போய் வந்தாய்?

**மரு :** கோயில் பூந்தோட்டம் பக்கமாகப் போய் வந்தேன். அங்கே கோயில் மண்டபத்தில் வெளியூர்த் துறவிகள் இருவர் வந்திருந்தார்கள். அவர்கள் பேசியதைக் கேட்டுக்கொண்டிருந்தேன்.

**தில :** துறவிகளா? எந்த நாட்டார்? எந்த ஊரார்?

**மரு :** மதுரைப் பக்கத்திலிருந்து வந்திருக்கிறார்கள்.

**தில :** நம் ஊரில் தங்கியிருக்கப் போகிருர்களா ? ஏதாவது நல்ல நூல் பற்றிப் பேசப் போகிருர்களா ?

**மரு :** இல்லே அக்கா. அவர்கள் சிதம்பரத்துக்கு வந்து, அங்கிருந்து காஞ்சிக்குப் போகிருர்கள். வழியில் நம் ஊரில் ஒருநாள் தங்கி இளேப்பாறுகிருர்கள்.

**தில :** அவர்கள் ஏதோ பேசிக்கொண் டிருந்ததாகச் சொன்ஞயே !

**மரு :** அவர்களுக்குள் பேசிக்கொண் டிருந்தார்கள். ஆஞலும் கேட்கக் கேட்க அறிவுக்கு விருந்தாக இருந்தது.

**பூங் :** எதைப் பற்றி ?

**மரு :** திருக்குறளேப் பற்றிப் பேசிஞர்கள்.

**பூங் :** திருக்குறள் உனக்குத் தெரியுமே தம்பி ! நீ நன்ருகப் படித்திருப்பதாகத் திலகவதி சொன்ஞளே !

**மரு :** இருந்தாலும், ஒவ்வொரு குறளேயும் அவர்கள் ஆழமாகச் சிந்தனே செய்து சொல்லும் கருத்துக்கள் எவ்வளவு அழகாக இருக்கின்றன !

**தில :** அப்படியா தம்பி !

**மரு :** ஆமாம் அக்கா ! கேள்வியால் தோட்கப்படாத செவி என்று திருவள்ளுவர் சொன்னது பெரிய உண்மை. நாம் எவ்வளவோ கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது.

**பூங் :** இன்னும் யார்யார்வந்து கேட்டுக்கொண்டிருந்தார்கள்?

**மரு :** நானும் பக்கத்துத் தெரு மாணவர்கள் சிலரும் கேட்டுக்கொண் டிருந்தோம். வடநாட்டிற்கு யாத்திரையாகப் போய்த் திரும்பியவர்கள் மூன்று பேர் மண்டபத்தில் தங்கியிருந்தார்கள். அவர்களும் எங்களோடு இருந்து கேட்டுக்கொண் டிருந்தார்கள்.

**பூங் :** வடநாட்டில் நம் அரசர் நடத்தும் போரைப் பற்றி அவர்கள் ஏதாவது சொன்னார்களா ?

**மரு :** சொன்னார்கள்.

**பூங் :** என்ன சொன்னார்கள் தம்பி ?

**மரு :** தமிழர்படை வீரத்தோடு போர் செய்கிறதாம். வெற்றி நமக்குத்தானும். விரைவிலேயே போர் முடிந்து விடுமாம். கலிப்பகையார் கலிப்பகையார் என்று அத்தான் பெயரைப் பெருமையோடு சொல்லிப் புகழ் கிறார்கள். அவரால்தான் நம் அரசர்க்கு வெற்றி என்று பாராட்டுகிறார்கள். அவர் நம் அத்தான் என் பதை நான் ஒருவர்க்கும் சொல்லவில்லை.

**பூங் :** கடவுள் காப்பாற்ற வேண்டும். இனிக் குடும்பத் துக்கு அவர்தான் தெய்வம் போல. அவர் வெற்றி மாலை சூடித் திருப்பிவந்து உங்களைக் காக்கவேண்டும். சரி, திலகவதி ! நேரம் ஆய்விட்டது. நான் சென்று வரட்டுமா ?

**தில :** போய்வா பூங்கோதை ! (பூங்கோதை போகிறார்.)

(சோக இசை—திலகவதியார் வீடு—வெளியூரிலிருந்து ஒருவன் ஓலை கொண்டுவந்து கதவைத் தட்டுகிறான்.)

**வந்தவன் :** (கதவைத் தட்டிக்கொண்டே) யார் அம்மா வீட்டிலே ?

**தில :** (உள்ளே இருந்து குரல் கொடுத்து) யார் அய்யா ? எந்த ஊர் ?

**வந்த :** வெளியூர் அம்மா. இதுதானே புகழனார் வீடு ?

**தில :** (கதவைத் திறந்து) ஆமாம், என்ன செய்தி ?

(அப்போது மருணீக்கியார் வெளியே போயிருந்து திரும்பி வருகிறார்.)

**வந்த :** இழவோலை அம்மா.

**மரு :** (அதைக் கையில் வாங்கியபடி திடுக்கிட்டு) என்ன இது? எங்கே? எந்த ஊரிலே? (வாங்கிப் படிக்கிருர்.)

திருவாமூர் புகழனுரின் மக்களுக்குத் தெரிவிக்கும் துயரச் செய்தியாவது: எங்கள் கொடிய வினையின் பயனுல் எங்கள் அருமை மகன் கலிப்பகை போர்க்களத்தில் விழுப்புண் பட்டு மாண்டதாக அரசரிடமிருந்து செய்தி வந்தது. எங்கள் குடும்பம் கதிகலங்கி............

**தில :** ஆ தெய்வமே! தெய்வமே! முடிந்ததா என் வாழ்க்கை! தெய்வமே! (மூர்ச்சையாகிருர்.)

**மரு :** அய்யோ! அக்கா, அக்கா! இப்படியா ஆக வேண்டும்? அக்கா அக்கா!

**தில :** (சிறிது நேரம் கழித்து, ஆழ்ந்த குரலில்) தம்பி!

**மரு :** (அலறிய நிலையில்) அக்கா!

**தில :** தம்பி! அழாதே.

**மரு :** எனக்குச் சொல்கிருயே, அக்கா.

**தில :** இனி நான் அழவேண்டியதில்லை. தம்பி! என் வாழ்க்கை முடிந்தது.

**மரு :** அய்யய்யோ! அப்படிச் சொல்லாதே அக்கா.

**தில :** அம்மாவை அனுப்பிவைத்தார்களே, அது போல் என்னையும் அனுப்பிவிடு தம்பி!

**மரு :** அக்கா! அப்படிச் சொல்லாதே, வேண்டா, வேண்டா.

**தில :** இனி நான் வாழ மாட்டேன், தம்பி.

**மரு :** உன் வாயால் சொல்ல வேண்டா, சொல்லாதே.

**தில :** நான் வாழக்கூடாது தம்பி! என்ஞல் முடியாது. அவருடன் போய்ச் சேர்வேன், போய்விடுவேன்.

**மரு :** அய்யோ! என்னைக் கைவிட்டுவிட்டா?

**தில :** அவரிடம் என்உயிர் போய்ச் சேர வேண்டும்.

**மரு :** என் கதி என்ன அக்கா? எனக்கு வேறு யார் இருக் கிருர்கள்? நான் மட்டும் இந்த உலகத்தில் ஏன் வாழ வேண்டும்? அம்மா! அம்மா!

**தில :** (அமைதி. பெருமூச்சு) தம்பி!

**மரு :** அம்மாவுக்குப்பின்—நீ தான்...........

**தில :** தம்பி! (கலக்கம். துயரம்.)

## காட்சி : 2

[தெரு. தெருவில் உள்ளவர் இருவர் பேசிக்கொள்கிறார்கள்.]

**ஆள் 1:** என்ன அங்கே? ஏதோ குழப்பமான ஒலி கேட்கிறதே. அந்த வீடு எப்போதும் அமைதியாய் இருக்கும் வீடு அல்லவா?

**ஆள் 2:** எங்கே? புகழனார் வீட்டிலா?

**ஆள் 1:** ஆமாம். என்ன குழப்பம்?

**ஆள் 2:** அய்யோ பாவம்! அந்தத் துயரக்கதையை ஏன் கேட்கிறாய்.

**ஆள் 1:** அதுதான் தெரியுமே. மக்கள் இருவரையும் திக்கில்லாமல் விட்டுவிட்டு அவர்கள் மாண்டு போனார்கள். அதற்கு இப்போது என்ன?

**ஆள் 2:** பட்ட காலிலே படும், கெட்ட குடியே கெடும் என்று—

**ஆள் 1:** என்ன அய்யா அது? வேறே ஏதாவது?

**ஆள் 2:** அதுதான் அய்யா கொடுமை! தெய்வத்திற்குக் கருணையே இல்லை போல் தெரிகிறது. அந்தப் பெண்ணுக்குப் பெற்றோர் இருக்கும்போதே திருமணத்துக்குப் பேசி முடித்துவிட்டார்கள் அல்லவா?

**ஆள் 1:** ஆமாம், ஆமாம்.

**ஆள் 2:** அந்த மணமகன் இறந்துவிட்டதாகச் செய்தி வந்திருக்கிறதாம்.

**ஆள் 1:** என்ன? என்ன? என்ன அய்யா?

**ஆள் 2:** வடக்கே நம் அரசர் நடத்தும் போருக்குப் போய் இருந்தார்—

**ஆள் 1:** அது தெரியும் அய்யா? வந்த செய்தி உண்மை யானதா? யார் சொன்னது? என்ன அய்யா அது?

**ஆள் 2:** இந்த உலகத்தில் என்ன என்னவோ நடக்கிறது அய்யா!

**ஆள் 1:** கொடுமை, கொடுமை! எனக்கு அந்த ஆளே தெரியுமே. பார்த்திருக்கிறேன். பேசியிருக்கிறேன். கலிப்பகையார் என்று அவர் பெயரைச் சொன்னால், யமனும் நடுங்குவானே! அய்யோ!

**ஆள் 2:** கொடுமை, கொடுமை!

**ஆள் 1:** என்ன கொடுமை அய்யா! தந்தையும் தாயும் இறந்து இன்னும் இரண்டு மாதம் முடியவில்லை. இதற்குள் வரப்போகிற மாப்பிள்ளையும் இப்படி—

[அப்போது வழியில் போய்க்கொண் டிருந்த பூங்கொடி அந்தப் பேச்சைக் கேட்டுத் திடுக்கிடுகிறாள்.]

**பூங்:** என்ன அய்யா அது? யாரைப் பற்றிப் பேசுகிறீர்கள்?

**ஆள் 1:** அதோ அந்தப் புகழனார் வீட்டில் மரணச் செய்தி வந்திருக்கிறதாம் அம்மா.

**பூங்:** என்ன? மரணச் செய்தியா? அதனால்தான் அவ்வளவு பேர் கூடியிருக்கிறார்களா?

**ஆள் 1:** பெற்றோர் இருந்தபோதே பெண்ணுக்குத் திருமணம் பேசி—

**பூங் :** (பரபரப்போடு) ஆமாம். அது தெரியும்.

**ஆள் 1 :** அந்த மாப்பிள்ளை போர்க்களத்தில் மடிந்து போய் விட்டாராம்.

**பூங் :** அய்யோ திலகவதி! (அலறியபடியே ஓடுகிறாள்.)

## காட்சி : 3

[திலகவதியார் வீடு. பூங்கொடி ஆறுதல் கூற வந்து பேசுதல்.]

**பூங் :** திலகவதி !

**தில :** (பெருமூச்சு. அமைதி)

**பூங் :** திலகவதி !

**தில :** என்ன ?

**பூங் :** என்ன திலகவதி ! சித்திரம் போல் இப்படி இருக்கிறாயே. இப்படி இருந்தால்—

**தில :** இனிமேல் எனக்குக் கவலை என்ன அம்மா இருக்கிறது ?

**பூங் :** என்ன, இப்படிப் பேசுகிறாயே ?

**தில :** என்ன பூங்கொடி ?

**பூங் :** நேற்று ஓடி வந்து உன்னைப் பார்த்தேன். அழுத கோலத்தில் கிடந்த உன்னோடு பேச வாய்வரவில்லை. நானும் அழுது கலங்கினேன். இப்போது உனக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை அம்மா.

**தில :** என்ன அம்மா செய்வது ?

**பூங் :** நீ எப்படி ஆறுதல் அடையப் போகிறாய் ?

**தில :** வருவது வரட்டும் அம்மா.

**பூங் :** என்னால் நினைக்கவும் முடியவில்லையே. (அமைதி) இப்படி மூலையிலே உட்கார்ந்திருந்தால் — (திலகவதி பேசவில்லை) தம்பி எங்கே அம்மா ?

**தில :** வெளியே போயிருக்கிறான்.

**பூங் :** சரியாகப் பேசவும் மாட்டேன் என்கிறாயே, திலகவதி!

**தில :** என்ன பேசுவது ?

**பூங் :** கலங்காதே அம்மா.

**தில :** பூங்கொடி ! நான் ஏன் கலங்கப் போகிறேன் ? துயரத்தில் கால்வைக்கும் போதுதான் கலக்கம், துன்பம் எல்லாம். துயரத்தின் எல்லையைக் கண்டபிறகு ஒன்றும் இல்லை அம்மா. எனக்கு இனி வரவேண்டியது என்ன இருக்கிறது ?

**பூங் :** அப்படி மனம் சோர்ந்து போகாதே அம்மா.

**தில :** சோர்வு ஏது, பூங்கொடி ? என் வாழ்க்கை முடிந்துவிட்டது.

**பூங் :** அய்யய்யோ ! அப்படி எல்லாம் நினைக்காதே.

**தில :** வேறு எப்படி நினைக்க வேண்டும் ? எனக்குத் திருமணம் என்று அவரைப்பற்றிப் பேசி முடிவு செய்த போதே நான் அவருடைய பொருளாகிவிட்டேன். தந்தையும் தாயும் இறந்த பிறகு, எனக்கு அவர்தான் ஒரு பற்றாக இருந்தார். அவர் வாழ்க்கை முடிந்த போதே என் வாழ்க்கையும் முடிந்ததுதான்.

**பூங் :** என்ன திலகவதி இப்படிப் பேசுகிறாயே !

**தில :** அப்போதே என் உயிர் உடலைவிட்டுப் போயிருக்க வேண்டும். அதுதான் நான் செய்த முடிவு. தவறிவிட்டது தம்பியால்.

**பூங் :** வேண்டா வேண்டா அம்மா! அப்படியெல்லாம் சொல்லாதே.

**தில :** என் முடிவை—என் துணிவை—தம்பியின் கண்ணீர் மாற்றிவிட்டது. தம்பியின் அலறல் மாற்றிவிட்டது. இல்லையானால் என் ஆவி அவரிடம் சென்று கலந்திருக்கும். எனக்கு ஏன் இனி வாழ்க்கை?

**பூங் :** தம்பியின் வாழ்க்கையைப் பார் அம்மா. அவனுக்கு இந்த உலகத்தில் வேறு யார் இருக்கிறார்கள்? நீ அப்படித் துணிந்தால், அவன் அதன் பிறகு வாழ மாட்டான் அம்மா.

**தில :** அதை நினைத்துத்தான் இன்னும் உயிரோடு வாழ்கிறேன். இல்லையானால்...

**பூங் :** திலகவதி! இனிமேல் அந்த எண்ணமே வேண்டா அம்மா.

**தில :** தெய்வமே! என் வாழ்க்கையில் இதுவும் ஒரு சோதனையா? வாழ்க்கை முடிந்த பிறகும் உயிர்விட உரிமை இல்லாமல் என்னைப் படைத்துவிட்டாயே!

## காட்சி : 4

[திருவாமூரில் ஒரு வீட்டுத் திண்ணை. சிலர் பேசிக்கொண்டிருக்கிறார்கள்.]

**ஆள் 1 :** என்ன அய்யா, நம் ஊர்க்கு ஏதோ நல்ல காலம் போலத் தோன்றுகிறதே!

**ஆள் 2 :** என்ன அது? எதை நினைத்துச் சொல்கிறாய்?

**ஆள் 1 :** எந்தப் பக்கம் பார்த்தாலும் அறச்சாலைகள், எந்த வழியில் பார்த்தாலும் தண்ணீர்ப் பந்தல்கள், புதிய புதிய சோலைகள், குளங்கள், வருவார் போவார்க்கும் ஏழைகளுக்கும் உணவும் உதவியும். நம் ஊர்க்கு எவ்வளவு சிறப்பான பேர், தெரியுமா? இந்தத் திருவாமூர் ஏற்பட்டு இவ்வளவு பெருமை இதுவரை கண்டதில்லையே. வெளியூர்களிலெல்லாம் இப்போது நம் ஊரைப் பற்றியே புகழ்ந்து பேசுகிறார்கள்.

**ஆள் 2 :** ஊருக்கா இந்தப் பெருமை எல்லாம்? இல்லை, இல்லை. எல்லாம் அந்த மருணீக்கியார்க்குத்தான்.

**ஆள் 1 :** அதைத்தான் சொல். வேறு எந்த ஊரில் இப்படிச் செய்கிறார்கள்?

**ஆள் 2 :** அது உண்மைதான். புகழனார் சேர்த்து வைத்த செல்வத்தை எல்லாம் வாரி வாரி வழங்குகிறார் வள்ளல் போல. அடஅட! இந்த மனம் நம் நாட்டு அரசர்க்கும்

வராது அய்யா. கவலை இல்லாமல் அறங்கள் செய்தது செய்தபடியே செல்வத்தை எல்லாம் கரைத்துவிட்டார்.

**ஆள் 3 :** (அப்போதுதான் அந்தத் திண்ணைக்கு வந்து உட்கார்ந்தபடி பேச்சில் கலந்துகொள்கிருர்.) யாரைப் பற்றிப் பேசுகிறீர்கள்? செல்வத்தை எல்லாம் கரைத்துவிட்டதாகச் சொன்னீர்களே!

**ஆள் 1 :** நம் ஊரில் மருணீக்கியார் இருக்கிருரே அவரைப் பற்றித்தான்.

**ஆள் 3 :** ஓஒ! அந்த உத்தமரைப் பற்றியா? அது ஒரு தனிக் குடும்பம் அய்யா. தந்தை தாய் மகன் மகள் எல்லாம் தனி வகையான மனிதர்கள்.

**ஆள் 1 :** சந்தேகமே இல்லை. இந்தச் சின்ன வயதிலேயே இவ்வளவு சிறந்த அறங்கள் செய்கிருரே.

**ஆள் 3 :** அந்தக் குடும்பத்துக்கு வந்த துன்பம் வேறொரு குடும்பத்துக்கு வந்திருந்தால் இருந்த இடம் தெரியாமல் எல்லாம் அழிந்துபோயிருக்கும்.

**ஆள் 2 :** இந்தப் புகழனுரின் குடும்பத்துக்கு நாளுக்கு நாள் புகழ் ஒளிவிட்டு வளர்கிறது.

**ஆள்-3 :** நெருப்பில் செத்தை விழுந்தால், ஒரு நொடியில் எரிந்து சாம்பலாகும். அந்த நெருப்பில் பொன்னை இட்டால், திருவள்ளுவர் சொன்னது போல், சுடச்சுட ஒளிவீசும், மேன்மேலும் ஒளிமிகும் அய்யா!

**ஆள்-2 :** ஆமாம். உண்மைதான். துன்பங்கள் ஒன்றன்பின் ஒன்ருக அடுத்தடுத்து விடாமல் வந்துகொண் டிருந்தன.

**ஆள்-3 :** இதை எண்ணிப்பார் அய்யா! திலகவதி என்ற அந்தப் பெண்ணுக்கு — இப்படிச் சொல்வதற்கும்

நாக்குக் கூசுகிறது, அவ்வளவு உத்தமியாக உயர்ந்து விட்டார் அந்த அம்மா—திருமணம் ஆகவில்லை. பெண் கொடுப்பதாகப் பேச்சு முடிவாகியிருந்தது. அவ்வளவு தான். அந்த ஆள் போர்க்களத்தில் இறந்துவிட்டார் என்றால், கணவனை இழந்த கற்புடைமனைவி போலவே, இளமையும் அழகும் துறந்துவிட்டாரே அந்த உத்தமி. எண்ணிப் பார்க்க முடியுமா, இதை வேறு குடும்பத்தில்?

**ஆள்-1:** உனக்குத் தெரியுமா அய்யா! போர்க்களத்திலிருந்து செய்தி வந்தவுடன், அந்த அம்மா தானும் அப்போதே உயிரைவிடத் துணிந்துவிட்டாளாம். கடைசியில் தம்பி அழுது வேண்டிக்கொண்டதால்தான், உயிரோடு வாழ்கிறாராம். பார்த்தாயா, அய்யா!

**ஆள்-2 :** அக்காவுக்கு ஏற்ற தம்பி அய்யா. அந்த அம்மா உயிரைத் துரும்பாக மதிப்பது போலவே, மருணீக்கியாரும் செல்வத்தை ஒரு பொருளாக மதிக்காமல் இவ்வாறு செலவழித்து அறங்கள் செய்திருக்கிறார்.

**ஆள்-3:** மருணீக்கியாரின் மனமே மாறிவிட்டது, தெரியுமா? உலகத்தில் அவர்க்கு எதன்மேலும் பற்றே இல்லை. குடும்ப வாழ்க்கை, செல்வம் தேடுதல் எல்லாவற்றையுமே வெறுத்துவிட்டார்.

**ஆள்-2 :** அப்படியானால், திருமணம்?

**ஆள்-3 :** அவர் துறவியே ஆய்விட்டார் என்று சொல்ல வேண்டும் அய்யா! அந்த வீட்டில் இப்போது அவர் இல்லை, தெரியுமா. அக்காவைத் தனியாக வீட்டில் விட்டுவிட்டுப் பாடலிபுத்திரம் போய்விட்டார். ஆனால் அக்காவுக்கு அந்த வகையில் ஒரு குறைதான் என்று சொல்கிறார்கள். பிறந்த சமயநெறியை விட்டுவிட்டு, அங்கே வேறு சமயத்தாருடன் பழகிக் கெட்டுப் போகி

றுரே என்று அந்த அம்மா வருந்துவதாகச் சொல்கிறுர்கள்.

**ஆள்-1 :** உத்தமர்கள் எங்கே போனுலும் யாருடன் பழகினுலும் கெட மாட்டார்கள் அய்யா.

**ஆள்-2 :** இந்தச் சிறுவயதிலேயே இவ்வளவு தான தருமம் செய்யும் மனம் உடையவர் ஒருகாலும் கெட்டுப்போக மாட்டார். பாடலிபுத்திரத்திலும் நல்ல பெயரும் புகழும் பெற்று விளங்குவார். இன்னும் கொஞ்ச காலம் பொறுத்துப்பார், தெரியும்.

**ஆள்-3 :** உண்மைதான். மாணிக்கம் எங்கே போனுலும் தன் ஒளியை வீசிக்கொண்டே இருக்கும். ஆனுலும், தனக்காகவே உயிர் வாழ்கின்ற அக்காவைத் தனியாக விட்டுவிட்டு, வெளியூர்க்குப்போய் வாழ்வது என்ருல்...

**ஆள்-1 :** அங்கே பெரிய அறிஞர்களோடும் துறவிகளோடும் பழகிக் கலைகளில் தேர்ந்தவராக விளங்க வேண்டும் என்ற ஆசை இருக்கலாம்.

**ஆள்-3 :** எல்லாம் வீண் ஆசை. தனக்காகவே வாழ்கிற தமக்கையைத் தனியே விட்டுவிட்டு, பேரும் புகழும் பெற வேண்டுமா ?

**ஆள்-1 :** நேற்று யாரோ சொன்னுர்கள், அந்த அம்மாவும் வெளியூர்க்குப் போகப் போவதாக.

**ஆள்-2 :** தம்பி இருக்கும் ஊருக்கே போக எண்ணமா ?

**ஆள்-1 :** இல்லை, இல்லை. தம்பிதான் துறவியாகி, துறவிகளோடு சேர்ந்து மடத்தில் வாழ்கிறுரே. அங்கே போக முடியுமா ? இந்த அம்மா எங்காவது கோயிலுக்குப் போய் தொண்டு செய்யப் போவதாகச் சொன்னுர்கள்.

ஆள்-2 : நூறு ஆயுசு அய்யா. (மெல்லிய குரல்) அதோ அந்த அம்மாவே வருகிறார்கள். பாருங்கள்.

ஆள்-1 : நல்ல இளமை. இந்த வயதில் இப்படி வாடி இளைத்து மெலிந்த உடம்போடு சிவனடியாராகத் தொண்டு செய்ய வேண்டுமா ?

ஆள்-3 : தாயைப் போல மகள் என்று சொல்வார்களே. அது உண்மையாகவே இருக்கிறது அய்யா.

ஆள்-2 : இரைச்சலிடாமல் மெதுவாகப் பேசுங்கள். (அந்த வழியாகத் திலகவதியார் நடந்து போகிறார். சிறிது நேரம் எல்லோரும் அமைதியாகப் பார்த்து நெஞ்சுருகி நிற்கிறார்கள், பிறகு பெருமூச்சு) என்ன உலகம் அய்யா !

ஆள்-3 : இவர்களுடைய தாயார் எனக்கு நன்றாகத் தெரியும். நான் சிறு பையனாக இருந்தபோது என்னை அன்போடு அழைத்துத் தின்பண்டங்கள் கொடுத்திருக்கிறார். தாய்க்கு இருந்த அதே அன்பின் பொலிவு மகளின் முகத்திலும் இருக்கிறது. என்ன அடக்கம் என்ன அமைதி ! தரைக்கும் நோகாமல் நடக்கும் நடை! எங்கே போகிறாரோ தெரியவில்லை.

ஆள்-2 : அந்த முகத்தில் அன்புமட்டும் அல்லாமல், ஏதோ ஏக்கமும் தேங்கியிருக்கிறது, பார்த்தீர்களா ?

ஆள்-1 : என்ன அய்யா! யாரால் முடியும்? வந்த துன்பத்தை எல்லாம் தாங்கிக்கொண்டு அதற்கு மேலும் தொண்டு செய்து வாழ்க்கையை நடத்துவது என்றால் ...

ஆள்-3 : எனக்கென்னவோ, நினைத்தாலும் உடம்பு சிலிர்க்கிறது. நாம் பார்த்தது மனித உருவத்தை அல்ல, ஏதோ ஒரு தெய்வத்தைப் பார்த்தோம் அய்யா. (அமைதி.) சரி. போகிறேன், பிறகு பார்க்கலாம்.

## காட்சி : 5

[திலகவதியார் வீடு. பூங்கொடி பேசிக்கொண் டிருக்கிறார்.]

**பூங் :** திலகவதி! உனக்கு எப்படி அம்மா பொழுது போகிறது?

**தில :** என்ன செய்வது? நான் வந்த வழி.

**பூங் :** ஏன் அம்மா வருத்தப்படுகிறாய்? உனக்கு வருத்தம் உண்டாக்க வேண்டும் என்று நான் கேட்கவில்லை அம்மா.

**தில் :** உன்னால் வருத்தம் இல்லை, பூங்கொடி! என் நிலைமையைத்தானே சொன்னாய்?

**பூங் :** தம்பி இல்லாமல் தனியே ஒரு வீட்டில் இருப்பது துன்பமாகத்தான் இருக்கும்.

**தில :** தம்பிக்காகத்தான் இந்த உடம்பில் இன்னும் இருக்கிறேன். இந்த வீட்டில் இன்னும் இருக்கிறேன். தம்பி தனியாகப் போய்விட்டான்.

**பூங் :** திரும்பி வருவான் அம்மா. பாடலிபுத்திரத்திலேயே தம்பி இருக்கப் போவதில்லையே. பல கலைகளையும் படித்துத் தேற வேண்டும் என்று போயிருக்கிறான் அம்மா. படித்துத் தேறியதும் வீட்டிற்குத் திரும்பாமல் என்ன செய்யப்போகிறான்?

**தில :** தம்பி பழைய தம்பியாக இல்லை, பூங்கொடி! கலைகளைப் படித்துத் தேறப் போனவன், வீட்டை மறந்துவிட்டான். என்னை மறந்துவிட்டான் என்பதற்காக நான் கவலைப்படவில்லை. அவனைக் கெட்டவன் என்று குறை கூறவும் இல்லை. அவன் நல்லவன்; மிக நல்லவன். அவன் சேர்ந்த இடம் அப்படிப்பட்ட இடம். சேர்க்கைக் குற்றம் அம்மா, சேர்க்கைக் குற்றம். இப்படி நேரும் என்றுதான் நான் முதலிலேயே தடுத்தேன். அங்கே என்னவோ புதிய உண்மைகள் விளங்குவதாக நம்பிப் போனான். போனவனை மயக்கிவிட்டார்கள். பேரும் பதவியும் கொடுத்து மயக்கிவிட்டார்கள் அம்மா.

**பூங் :** திலகவதி! நீ சொல்வதை நம்ப முடியவில்லை அம்மா. நம்முடைய தம்பி அப்படிப்பட்டவன் அல்ல. தம்பியின் குணம் நமக்குத் தெரியாதா?

**தில :** எப்படியோ? நான் தனியே இருந்து இங்கே என்ன செய்யப் போகிறேன்?

**பூங் :** வேறு என்ன செய்யப் போகிறாய்?

**தில :** நல்ல முடிவுதான் செய்திருக்கிறேன்.

**பூங் :** என்னம்மா அது?

**தில :** நானும் தம்பியும் சிறு பிள்ளைகளாக இருந்தபோது அம்மாவும் அப்பாவும் எங்களைத் திருவதிகை வீரட்டானத்துக்கு அழைத்துக்கொண்டு போனார்கள். அந்தக் கோயில் இன்னும் என் நினைவில் அப்படியே இருக்கிறது. நல்ல கோயில்!

**பூங் :** இப்போது ஏன் அம்மா அந்தக் கோயிலை நினைத்துக் கொண்டாய்?

**தில :** தம்பி அந்தக் கூட்டத்திலிருந்து தப்பித்து நல்ல வழிக்கு வர வேண்டும் என்று நான் வேறு எங்கே போய் முறையிடுவேன் ?

**பூங் :** ஆண்டவனிடம்தான் முறையிட்டுக் கொள்ள வேண்டும்.

**தில :** ஆண்டவன் என்று நினைத்தால், எனக்கு எப்படியோ அந்த ஊரிலுள்ள கோயில்தான் நினைவுக்கு வருகிறது.

**பூங் :** இப்படித்தான் ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் இடம், ஒவ்வொரு கோயில், ஒவ்வொரு பழக்கம்.

**தில :** தம்பியை அடிக்கடி நினைக்கிறேன். வருந்துகிறேன். அப்போதெல்லாம் அந்தக் கோயிலுக்குப் போய் முறையிட்டு, ஏதாவது தொண்டு செய்யவேண்டும் என்று...

**பூங் :** நல்லதுதான். இந்த வெள்ளிக்கிழமை போகலாமே. நானும் வருவேன்.

**தில :** அங்கே போன பிறகு, நான் ஏன் அம்மா இந்த வீட்டுக்குத் திரும்பிவர வேண்டும்? இந்த வீட்டில் யார் இருக்கிறார்கள் ? நான் ஏன் வர வேண்டும் ?

**பூங் :** அங்கேயே இருந்துவிடப் போகிறாயா ?

**தில :** ஆமாம். அடுத்த வாரம் அங்கேயே போய்விடுவேன்.

**பூங் :** அதைத்தான் ஒரு நல்ல முடிவு செய்திருப்பதாகச் சொன்னாயா ?

**தில :** ஆமாம் அம்மா. அதுதான் கதி. வேறு வழி என்ன?

**பூங் :** உனக்கு யார் சொல்வார்கள்? சரிதான்.

## காட்சி : 6

[திருவதிகை வீரட்டானம். விடியற்காலை. கோயிலில் திலகவதியார் தொண்டு செய்கிறார். கோயிலைப் பெருக்கி, சாணத்தால் மெழுகிக்கொண் டிருக்கிறார். அங்கே ஒரு புறத்தில் ஒரு தூணின் அருகே படுத்து உறங்கிக்கொண் டிருந்த பூங்கொடி கண்விழித்துப் பார்த்து ஆர்வத்தோடு திலகவதியாரிடம் செல்கிறாள்.]

**பூங் :** *திலகவதி !*

**தில :** (திடுக்கிட்டு, மெழுகுவதை நிறுத்துகிறார். திரும்பிப் பார்க்கிறார்) *யார் அம்மா அது ?*

**பூங் :** (திலகவதியைத் தழுவி) *நான் தெரியவில்லையா, திலகவதி.*

**தில :** (எழுந்து நின்று ஒருகையால் அணைத்தபடி) *பூங்கொடியா? நீயா இந்த நேரத்தில் வந்தாய் ? இங்கே எப்படி வந்தாய் அம்மா ?*

**பூங் :** *நேற்று இரவே இந்த ஊருக்கு வந்தேன். உன்னைப் பார்க்கவேண்டும் என்றுதான் புறப்பட்டு வந்தேன். தேடிப் பார்த்தேன், கேட்டுப் பார்த்தேன், யாரும் சரியாகச் சொல்லவில்லை. கோயிலில் வந்தால் பார்க்கலாம் என்று இங்கே வந்தேன். அயர்ந்து படுத்தேன். நன்றாகத் தூங்கிவிட்டேன்.*

**தில :** *அய்யோ ! எனக்காக ஏன் அம்மா இவ்வளவு தொலைவு வர வேண்டும் ?*

**பூங் :** நீ ஊரைவிட்டு வந்த நாள்முதல் உன் நினைவே ஓயாமல் இருந்துவருகிறது. நீ என் கண்ணிலேயே இருக்கிறாற் போல் இருக்கிறது. ஒருமுறை போய்ப் பார்த்து விட்டு வரவேண்டும் என்று துணிந்து வந்துவிட்டேன்

**தில :** அந்தத் தூணின் பக்கத்தில் நீயா படுத்துக்கொண்டிருந்தாய்?

**பூங் :** ஆமாம். நான்தான்.

**தில :** யாரோ படுத்துக்கொண் டிருக்கிறார்கள், எழுப்பக் கூடாது என்று எண்ணினேன். அந்த இடத்தை அப்புறம் பெருக்கலாம் என்று விட்டுவிட்டேன். முகத்தை நன்றாக மூடிக் கொண்டு படுத்திருந்தாய்.

**பூங் :** அப்படியா? நீதான் பெருக்கிக்கொண் டிருந்தாயா? யாரோ வேலைக்காரர்கள் வந்து பெருக்குகிறார்கள் என்று கண் திறக்காமல் படுத்துக்கொண் டிருந்தேன்.

**தில :** வந்த அலுப்பு. உடம்பு எப்படியோ இருக்கும்.

**பூங் :** (திலகவதியின் கையில் சாணம் மெழுகும் துணியைப் பார்த்து) இது என்ன அம்மா கையில்?—இதற்காகவா திருவாமூரை விட்டு — பிறந்த ஊரைவிட்டு — வீடு வாசலை விட்டு — இங்கே வந்தாய்? ஏழை வேலைக்காரரைப் போல் தரையைப் பெருக்கவும் மெழுகவும் உனக்குத் தலைவிதியா அம்மா? செல்வக் குடும்பத்தில் பிறந்து, என்னைவிடச் சீரும் சிறப்புமாக வளர்ந்து......

**தில :** என்ன பூங்கொடி நீயும் இப்படிப் பேசுகிறாயே. இந்த உலகத்தை எல்லாம் படைத்துக் காப்பாற்றும் கடவுள் ஒருவன்தானே செல்வன்? அவனுக்கு முன் நாம் எல்லாம் ஏழைகள்தானே அம்மா? நாம் அவனுக்குத் தொண்டு செய்யும் வேலைக்காரர்கள்தானே? உனக்குத் தெரியாதா?

**பூங் :** இருந்தாலும்......

**தில :** இந்த உடம்பே அவனுடைய தொண்டுக்காகப் பெற்றதுதான் பூங்கொடி.

**பூங் :** இந்த வேலைகளைச் செய்வதற்கு வேறு ஆட்கள் இருக்கிறார்கள், திலகவதி.

**தில :** இந்த வேலைகளைச் செய்வதற்குப் பிறந்த ஆட்களில் நான் ஒருத்தி அம்மா.

**பூங் :** உன்னோடு நான் எப்படிப் பேசுவது? நீ ஒரே பிடிவாதமாகப் பேசுகிறாயே.

**தில :** உண்மை உறுதியாகத்தான் இருக்கும் அம்மா.

**பூங் :** தம்பி மருணீக்கி தொண்டு செய்யவில்லையா? அவன் உன்னைப்போல் இப்படியா கைவருந்தி இந்த வேலைகளைச் செய்கிறான்? நீ மட்டும்......

**தில :** எனக்குத் தம்பிமேல் அதுதானே வருத்தம்! அவன் பெயரையும் புகழையும் நாடுகிறானே. தகாதவர்களோடு சேர்ந்து கெடுகிறானே. அன்பையும் தொண்டையும் நாடவில்லையே. இப்படி எல்லாம் நினைத்து நினைத்துத் தான் வருந்துகிறேன்.

**பூங் :** அவனும் தான தர்மம் எவ்வளவோ செய்யவில்லையா?

**தில :** ஆண்டவன் கொடுத்த செல்வத்தை வாரி வழங்குவது மட்டும் போதுமா? அதைச் செய்வதில் ஒன்றும் அருமை இல்லையே. பெயர் கிடைக்கிறது, புகழ் கிடைக்கிறது. அதற்காகவே ஆசைப்பட்டு உலகத்தில் பலர் செய்கிறார்கள். அதனால் மனம் சீர்ப்படாது அம்மா. ஆணவம் அதனால் நீங்கிவிடாது. நேர் மாறாக, ஆணவம் வளர்வதற்கும் இடம் இருக்கிறது. ஏழையாய் எளிய கோலத்தோடு கைவருந்தித் தொண்டு செய்தால்தான், ஆணவம் அப்பால் செல்கிறது.

அம்மா. நான் இங்கே வந்த பிறகு அனுபவத்தால் தெரிந்துகொண்டேன். இப்பொழுது என் மனம் தூய்மையாக இருக்கிறது. அமைதியாக இருக்கிறது. இன்பமாகவும் இருக்கிறது பூங்கொடி! தம்பியும் இந்த வழியில் தொண்டு செய்து வாழக்கூடாதா என்ற ஒரே ஒரு கவலைதான் இப்போது என்னை வாட்டுகிறது. அதைத்தான் ஆண்டவனிடம் முறையிட்டு வருந்து கிறேன்.

**பூங் :** உன் வாழ்க்கை எப்படி எப்படியோ மாறிவிட்டதே.

**தில :** எல்லாம் நன்மைக்கே என்று நினைக்க வேண்டும். இன்னும் கொஞ்சம் மெழுக வேண்டும். வேலை செய்த படியே பேசிக்கொண் டிருக்கலாம்.

**பூங் :** நானும் செய்யட்டுமா? நானும் கொஞ்சம் மெழுகு கிறேன்.

**தில :** நல்லதுதான். ஆனால், பயணத்தால் அலுத்திருப் பாய்.

**பூங் :** என் பங்குக்கு நானும் ஏதாவது தொண்டு செய்ய வேண்டுமே!

**தில :** அப்படி உனக்கு ஆர்வம் இருந்தால், அதோ அந்தப் பவழமல்லி மரத்தின் கீழே உதிர்ந்திருக்கும் மலர்களைப் பொறுக்கிவை. நந்தியாவட்ட மலர்களைக் கொய்து வை. கொன்றை மலர்களைப் பறித்துவை. நான் மெழுகிவிட்டு வந்துவிடுகிறேன். பிறகு இருவரு மாகச் சேர்ந்து மாலைகள் தொடுக்கலாம். என்ன பார்க்கிறாய் அங்கே?

**பூங் :** அதோ வருகிறவரை எங்கோ பார்த்தாற் போல் இருக்கிறது.

**தில :** யாரோ வெளியூராராக இருக்கலாம். (புதியவர் நெருங்கி வருகிருர்.)

**பூங் :** அய்யா ! எந்த ஊரோ ?

**புதியவர் :** நான் சிதம்பரம் அம்மா. காஞ்சிக்குப் போய் அங்கிருந்து பாடலிபுத்திரம் வரைக்கும் யாத்திரை போய் வருகிறேன், அம்மா.

**பூங் :** உட்காருங்கள். பாடலிபுத்திரத்தில் என்ன செய்தி? என்ன சிறப்புப் பார்த்தீர்கள் ?

**புதி :** எங்கே பார்த்தாலும் துறவிகள், பெரிய பெரிய மடங்கள், பல பல கலைகள், அரிய பெரிய ஆராய்ச்சிகள், நமக்கு எட்டாத தத்துவங்கள் என்னென்னவோ இருக்கின்றன.

**பூங் :** அப்புறம் ?

**புதி :** நம் பக்கத்திலிருந்து பலர் போய்ப் படிக்கிருர்கள். உயர்ந்த நிலையில் வாழ்கிருர்கள்.

**பூங் :** இருக்கலாம்.

**புதி :** மருணீக்கியார் என்பவர் ஒருவர். நம் பக்கத்தாராம். (திலகவதியார் வியப்புடன் கேட்டல்) அவர் அங்கே பல நூல்களையும் படித்து, மற்றவர்கள் எல்லோருக்கும் தலைவராய் விளங்குகிருர். தருமசேனர் என்ற பட்டமும் அவர்க்கு அளித்திருக்கிருர்கள்.

**பூங் :** அய்யா ! அவருடைய தமக்கையார் இந்த அம்மா.

**புதி :** (வியப்புடன்) அப்படியா ? வணக்கம் அம்மா ! தருமசேனருடைய தமக்கையாரா நீங்கள் ? அப்படியா ?

**பூங் :** உடன்பிறந்த தமக்கை அய்யா ?

**புதி :** (இன்னும் தீராத வியப்புடன்) அப்படியா ? உங்களுடைய தம்பியாரா தருமசேனர் ?

**பூங் :** இந்த அம்மா செய்யும் தொண்டுகளைப் பார்த்தால் அப்படித் தெரியவில்லை அல்லவா ?

**புதி :** அதுதான் அம்மா சொல்லலாம் என்று வாய் எடுத்தேன். ஆனால், என்னவோ, வாய் திறப்பதற்கே அச்சமாக இருந்தது. நீங்களே சொல்லிவிட்டீர்கள்.

**பூங் :** இதுதான் உலகம்.

**புதி :** தருமசேனர் அங்கே எவ்வளவு செல்வாக்கோடு விளங்குகிறார். அரசருக்கு அடுத்தபடி அவர்தான் அம்மா. அரசரும் வணங்கும்படியான குருவாக விளங்குகிறார்.

**பூங் :** இருக்கலாம்.

**புதி :** நான் கண்ணாலே கண்டேன் அம்மா. அவரைச் சுற்றிலும் மாணக்கர் கூட்டங்கள், துறவிகளின் கூட்டங்கள். அவரைத் தரிசிப்பதே அருமையாய் இருக்கிறது.

**பூங் :** அப்படித்தான் கேள்விப்படுகிறோம்.

**தில :** அய்யா ! அதெல்லாம் சரிதான். அவன் அங்கே மகிழ்ச்சியாக இருக்கிறானா ? நல்லபடி இருக்கிறானா ?

**புதி :** அவர் சொன்னதைத் தலைமேல்கொண்டு செய்வதற்கு எவ்வளவுபேர் காத்திருக்கிறார்கள் ! வந்தால், தருமசேனர் வாழ்க என்று வாழ்த்தொலி முழங்குகிறார்கள். எல்லோரும் அவருடைய பெருமையும் புகழுமே பேசுகிறார்கள். அவருக்கு என்ன அம்மா குறைவு ?

**பூங் :** அப்படியா ? என்ன பெருமை ! திலகவதி !

**புதி :** கண்ணால் பார்க்கக் கொடுத்துவைக்க வேண்டும் அம்மா.

**தில :** அந்த நிலை போதுமா ?

புதி : அதைவிட இன்னும் என்ன வேண்டும் அம்மா. துறவிக்கு வேந்தனும் துரும்பு என்று வாழ்கிறார் அவர்.

தில : அவன் ஒரு பெரிய வேந்தனாக வாழ்கிறான் என்று சொல். அவ்வளவுதானே ?

புதி : நீங்களும் அங்கே அவருக்குத் துணையாக இருக்காமல், இங்கே இப்படிக் காலம் கழிக்கிறீர்களே. அங்கே எவ்வளவு பெருமையோடு நீங்களும் இருக்கலாம் !

தில : வாழ்க்கையில் வீடும் வாசலும் பொன்னும் பொருளும் மட்டும் இருந்தால் அமைதியும் இன்பமும் கிடைக்குமா ? பெருமையும் அப்படித்தான் ! அய்யா ! நானும் அங்கே இருக்கவேண்டுமா ? (பூங்கொடியைப் பார்த்து) மறந்துவிட்டுப் பேசுகிறார் பூங்கொடி !

பூங் : எதை அம்மா ?

தில : என்னைப் போன்ற பெண்களுக்கு அந்தக் கூட்டத்தில் இடம் ஏது அம்மா ?

பூங் : ஆமாம் அய்யா. அது ஒரு வழி. இந்த அம்மா அங்கே போகவே முடியாது. சரி. எங்களுக்கு வேலை இருக்கிறது. நீங்கள் கோயிலுக்கு உள்ளே போய்ப் பாருங்கள்.

புதி : நல்லது அம்மா. போய் வருகிறேன். உங்களைப் பார்த்தது பெரிய பாக்கியம். வருகிறேன். நானும் உடனே ஊருக்குப் புறப்பட வேண்டும்.

பூங் : சரி, புறப்படுங்கள்.

[திருவதிகை வீரட்டானத்துக் கோயில். மணிஓசை. திலகவதியார் கண்ணீர் மல்கி நெஞ்சுருகி இறைவனை வேண்டுகிறார். வீணை இசை.]

**தில :** அம்மையப்பா! உன்னிடம் யான் பொன் கேட்க வில்லை, புகழ் கேட்கவில்லை, எந்தச் சிறப்பும் கேட்க வில்லை, முத்தியும் கேட்கவில்லை. தொண்டு செய்யும் இந்த வாழ்வே எனக்குப் போதும். ஆயினும் என் மனத்தில் பல ஆண்டுகளாக உள்ள ஒரு குறையை நீ தீர்க்கலாகாதா? என் தம்பியின் நெஞ்சம் அன்பு நெறியில்—தொண்டு நெறியில்—திரும்பக் கூடாதா? இந்த ஒன்றுதான் நான் கேட்பது. தந்தையையும் தாயையும் இளமையிலே இழந்துவிட்ட என் தம்பி யைக் காப்பாற்றக் கருணை செய்யலாகாதா? அன்புரு வான தெய்வமே! என்னைக் காத்தருளும் கருணை யுருவமே! தன் நெஞ்சம் உனக்கு இடமாக வைக்கும் படியாகத் தம்பிக்கு அருள் புரிவாய். கலையறிவுக்கும் கற்பனைப் புகழுக்கும் பதவிக்கும் பட்டங்களுக்கும் இடமாக உள்ள அவனுடைய நெஞ்சம் உன் திருவடி களுக்கு இடமாக விளங்காதா? பல ஆண்டுகளாக உன்னை வேண்டிக்கொண்டேனே? இன்னும் அருள் செய்யாமல் இருந்தால், ஏழை நான் எப்படி உயிர்வாழ் வேன்? (அமைதி. உருகி நிற்கிறார்.)

[பாடலிபுத்திரத்திலிருந்து வந்த ஒருவன் அவரை வணங்குகிறான்.]

**வந் :** வணக்கம் அம்மா, பாடலிபுத்திரத்திலிருந்து வரு கிறேன்.

**தில** நீ யார் அப்பா.

**வந் :** உங்கள் தம்பியார் அனுப்பினார் அம்மா.

**தில :** ஏதேனும் செய்தி உண்டா?

**வந் :** பொல்லாத சூலை நோயால் மிகவும் வருந்துகிறார் அம்மா. குடல் எல்லாம் முடக்கி வருத்துகின்றது. பட முடியாத துன்பம் அம்மா. என்னென்னவோ செய்தும் தீரவில்லை. எல்லாரும் கைவிட்டார்கள்.

யாருக்கும் தெரியாமல் அக்காவிடம் போய்ச் சொல்லி விட்டுவா என்று அவரே என்னை அனுப்பினர்.

**தில :** (கலங்கி நின்று) கருணைக் கடலே! (அமைதி. வந்தவனைப் பார்த்து) அப்பா! நான் அங்கே உள்ள மடத்துக்கு எந்தக் காரணத்தாலும் வரமுடியாதே. இதைத் தம்பியிடம் போய்ச் சொல். நான் என்ன செய்வேன்? என் நெஞ்சம் கலங்குகிறதே. அவன் வரக்கூடாதா?

**வந் :** நல்லது அம்மா. அப்படியே போய்ச் சொல்வேன். வணக்கம் அம்மா.

[போகிருன். திலகவதியார் கலங்கி நிற்கிருர்.]

## காட்சி : 7

[கி. பி. 625. திருவதிகையில் திலகவதியார் உள்ள மடம். மருணீக்கியார் பாடலிபுத்திரத்திலிருந்து இரவில் புறப்பட்டு அங்கே வந்து சேர்கிறார். வந்து தமக்கையின் திருவடிகளில் விழுந்து வணங்குகிறார். நோயால் வருந்தி வருந்திப் பெருமூச்சு விட்டு நைகிறார்.]

**மரு :** அக்கா! நீதான் என்னை அன்று முதல் அன்போடு காப்பாற்றினாய். இன்றும் காப்பாற்ற வேண்டும். இந்தச் சூலை நோயை (வருந்தி மூச்சு விடல்) அய்யோ என்னால் பொறுக்க முடியவில்லையே. நெறி தவறிப் பல ஆண்டுகள் கழித்துவிட்டேன். அக்கா! நீதான் என்னை நல்வழிப் படுத்திக் காப்பாற்ற வேண்டும்.

**தில :** தம்பி! இது இறைவனுடைய திருவருள் என்றே நம்பு. பதவி பட்டம் படிப்பு இவை எல்லாவற்றையும் மதிக்காதே. அன்பு தொண்டு இவைகளை மட்டும் போற்றி வாழக் கற்றுக்கொள். (திருநீறு எடுத்தளித்து) இதோ ஈசன் அருள் என்று அணிந்துகொள்.

**மரு :** (அதைப் பெற்றுக் கொண்டு) நல்வாழ்வு பெற்றேன். (அணிகிறார்) பதவிக்கும் பெருமைக்கும் ஆசைப்பட்டு நெறி அறியாமல் மயங்கினேன். அக்கா! மயக்கம் தீர்ந்தேன், தீர்ந்தேன்.

**தில :** (பெருக்கி மெழுகுவதற்கு வேண்டிய தோண்டி முதலியவற்றை எடுத்துக் கொண்டு) விடியற்காலம் ஆயிற்று. கோயிலுக்குப் போவோம் வா. தொண்டு செய்வோம்.

வா. தொண்டுதான் மனத்தைத் தூய்மை செய்யும், தொண்டுதான் மனத்தைக் கோயில் ஆக்கும், தொண்டு தான் தெய்வ நெறி. வா, போவோம்.

[தமக்கையாரின் பின்னே தம்பியார் போகிறார்.]

**மரு :** (தமக்கையாரின் கையில் உள்ளவற்றைப் பார்த்து) அக்கா நானும் இனி ஒன்று செய்யப்போகிறேன். இனி இந்தக் கை ஏடுகளைப் புரட்டாது. கல்லையும் புல்லையும் புரட்டும். தலைமைச் சின்னங்களைத் தாங்கிய கை, இனிமேல் உழவாரத்தைத் தாங்கும். கோயில் வழியில் உள்ள புல்லைச் செதுக்குவேன். கல்லையும் முள்ளையும் அகற்றுவேன். என் வாழ்க்கை உய்வதற்கு உரிய வழியைக் கண்டுகொண்டேன். உன்னைப் பின்பற்றுவேன். நீ எனக்கு முன் பிறந்த தமக்கை மட்டும் அல்ல, என்னை உய்விக்கும் குருவும் நீயே !

[கோயிலை அடைந்து இறைவன்முன் நின்றதும் மருணீக்கியார் பாடுகிறார்.]

**மரு :** கூற்றா யினவாறு விலக்ககலீர்
கொடுமை பலசெய்தனன் நான்அறியேன்

ஏற்றாய் அடிக்கே இரவும்பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்

தோற்றாதென்வயிற்றி னகம்படியே
குடரோடு தொடக்கி மடக்கியிடவே

ஆற்றேன் அடியேன் அதிகைக்கெடில
வீரட் டானத் துறையம்மானே.

**தில :** (பாட்டு இறுதி அடி ஒலித்துக்கொண் டிருக்கும்போதே) வீரட்டானத்து அப்பா ! எல்லாம் வல்ல பரமே ! காத்தருளினாய். தம்பியைக் காப்பாற்றினாய். உன் கருணை வாழ்க. என் வாழ்க்கையின் குறிக்கோள் நிறைவேறியது.

***மரு :*** (பாடுகிறார்)

நெஞ்சம் உமக்கே இடமாகவைத்தேன்
நினையாது ஒருபோதும் இருந்தறியேன்

வஞ்சம் இதுஒப்பது கண்டறியேன்
வயிற்றோடு தொடக்கி முடக்கியிட

நஞ்சாகி வந்துஎன்னை நலிவதனை
நணுகாமல் துரந்து கரந்துமிடீர்

அஞ்சேலும் என்னீர் அதிகைக்கெடில
வீரட் டானத் துறைஅம் மானே.

***தில :*** (இறுதியடி ஒலிக்கும்போது) *போதும் நான் வாழ்ந்தது. போதும். அருளுருவே! வேண்டியதை அளித்தாய், கருணைக்கடலே! வாழ்ந்தோம், உய்ந்தோம்.*

[பாட்டு மெல்ல முடிவதும் திலகவதியாரின் பேச்சு முடிவதும் ஒன்றாக இருக்கவேண்டும்.]

# வீண் கனவு

---

## காட்சி : 1

கங்கைகொண்டசோழபுரத்து அரண்மனை.

கி. பி. 1044. மாலை வேளை.

[சோழ வேந்தன் முதலாம் இராசேந்திரன் கட்டிலில் சாய்ந்தவாறு இசை கேட்டுக்கொண் டிருக்கிறான்.]

**பாடல் :—**

திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்கண் உலகளித்த லான்.

ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்
காவிரி நாடன் திகிரிபோல் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்.

மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்
நாமநீர் வேலி உலகிற்கு அவனளிபோல்
மேனின்று தான்சுரத்த லான்.

**சோழன் :** பாட்டுப் போதும். போகலாம். சேனைத் தலைவர் மட்டும் இருக்கலாம்.

[எல்லோரும் போகிறார்கள்.]

சேனைத் தலைவரே! பாட்டு நன்ருக உள்ளத்தைத் தொடுகிறது. எத்தனை முறையோ கேட்டிருக்கிறேன். கேட்கும் போதெல்லாம் செவி குளிர்கிறது. ஆனல் ஒரு வேறுபாடு. இதற்கு முன் இந்தப் பாட்டைக் கேட்ட போதெல்லாம், என் உள்ளத்தில் ஒரு பெருமிதம்—செருக்கு—ஏற்பட்டது உண்டு. இன்று அது ஏற்படவில்லை. காவிரிநாட்டைப் பற்றி அன்பு ஏற்பட்டது. அவ்வளவுதான். இதற்கு முன் அப்படி அல்ல. எனக்கு யாரும் நிகர் அல்ல என்ற பெருமிதம் ஏற்பட்டது. அது இன்று இல்லை.

**சேனைத் :** அரசர் பெரும! காரணம் என்னவோ? ஒருகால், உங்கள் உடல் நிலை காரணமாக இருக்கலாம்.

**சோ :** நம் படைகள் எப்படி இருக்கின்றன? எங்காவது போருக்குப் போக வேண்டும் என்ற தினவு இருக்குமே! உமக்கும் அந்தத் தினவு—(புன்சிரிப்புச் சிரிக்கிருர்.) என்ன மறுமொழி இல்லையே.

**சேனைத் :** அரசர் பெருமானின் உடல் நிலை தேறட்டும். பிறகு படையைப் பற்றியும் போரைப் பற்றியும் எண்ணலாம்.

**சோ :** ஆம். உடல் தேறியவுடன், காட்டில் வேட்டைக்குச் செல்வது போல், பக்கத்து நாட்டின் மேல் ஒரு முறை படையெடுக்கலாம். இளைத்தவன் பாண்டியன் இருக்கிருன். (முன்னிலும் மிகுதியாகச் சிரித்து) அவன் நாட்டின் மேல் படையெடுத்து அழிக்க வேண்டும் என்ற ஆசை உள்ளது அல்லவா? என்ன சொல்கிறீர்? (சேனைத் தலைவர் மறுமொழி கூருமல் திகைக்கிருர்) சேனைத் தலைவரே! வாழ்நாள் எல்லாம் இதுதான் தொழிலா? படையெடுத்துப் பாழ்படுத்தும் வீரச் செயலில் இன்னும் சலிப்பு ஏற்படவில்லையா?

**சேனைத் :** அரசர் பெருமானின் கட்டளைப்படியே—.

**சோ :** என் கட்டளையா ? நான் கட்டளையிடும் காலம் கடந்து போய் விட்டது. இப்போது இந்த உதவாத உடம்போடு, இறைவன் கட்டளைக்குக் காத்திருக்கிறேன். ஆனாலும் நான் சொல்லக் கூடியது உண்டு.

**சேனைத் :** (கலக்கத்தோடு) அரசே !

**சோ :** நன்றாகக் கேளும். நான் இந்த நாட்டை ஆளப் பிறந்தவன். இந்த நாடு என் நாடு என்று பெருமைப் படலாம். எனக்கு உரிமை உண்டு. ஆனால் பிறர் நாட்டைப் பற்றி ஏன் குறைவாக எண்ண வேண்டும் ? பாண்டியர் சேரர் ஆட்சியைப் பற்றி ஏன் குறைவாக எண்ண வேண்டும் ?

**சேனைத் :** உள்ள பெருமைதானே ? அரசர்க்கு அது இயல்புதானே ? வழிவழியாக வந்த பெருமிதம்—.

**சோ :** வழிவழியாக வந்துவிட்டது. அதனாலேயே தகும் என்று சொல்ல முடியுமா ?

**சேனைத் :** எண்ணிப் பார்க்கத் தக்கது, அரசே !

**சோ :** உம் வீட்டில் நீர் வாழ்கிறீர். ஆனால் பக்கத்து வீட்டைப் பாழ்படுத்த உமக்கு உரிமை உண்டா ? பக்கத்து வீட்டை உம் வீட்டோடு சேர்த்துக்கொள்ள உரிமை உண்டா ? பக்கத்து வீட்டாரைப் பழிக்கவோ அடக்கவோ உரிமை உண்டா ?

**சேனைத் :** இல்லை, அரசே !

**சோ :** அப்படியானால், வீட்டுக்கு ஒரு நீதி, நாட்டுக்கு ஒரு நீதியா ?

**சேனைத் :** அது குடும்பம். இது அரசியல். வேறு வேறு நீதியாக வழிவழியாக இருந்துவருகிறது.

**சோ :** வழிவழியாக என்று சொல்லிக் குற்றங்களைக் கடைப்பிடித்துவருவது தகுமா ?

**சேனைத் :** விளங்கவில்லை, அரசே !

**சோ :** விளங்குகிறது. மனம் இடம் தரவில்லை என்று சொல்லும். பழகிய குற்றத்தை விட்டு மனம் வெளியேற முடியவில்லை.

**சேனைத் :** குற்றமா, அரசே !

**சோ :** குற்றம்தான். ஆனால் எளிதில் உணர முடியாது. எனக்கே இத்தனை ஆண்டுகளாக உணர முடியவில்லையே ! மகன் இராசாதிராசனைப் பற்றியும் பேரனைப் பற்றியும் சோழர் குடும்பத்தின் எதிர்காலம் பற்றியும் எண்ணிக்கொண்டிருந்தபோது, நேற்று இரவு திடீரென்று ஒளி தோன்றியது.

**சேனைத் :** இளவரசர் இராசாதிராசனும் பெரிய வீரர் அரசே ! அவரும் தம் குடைக் கீழ் எல்லா நாடுகளையும் வென்று அடக்குவார் என்பது உறுதி.

**சோ :** பிறகு, பேரன் ; அதற்குப் பிறகு— ?

**சேனைத் :** வழிவழியாகப் புலிக்கொடியே பறக்கும். வேறு எவரும் தலையெடுக்க முடியாது.

**சோ :** உண்மையாக உணர்ந்து பேசுகிறீரா ? என்னைப் புகழ்வதற்காகப் பேசுகிறீரா ?

**சேனைத் :** உள்ளத்தில் உணர்ந்து சொல்கிறேன்.

**சோ :** அப்படியானால், நெடுஞ்செழியன் முதலான பாண்டியர்கள் பிறந்த மரபு இன்று ஏன் இப்படி இருக்கிறது ? இமய வரம்பனும் செங்குட்டுவனும் பிறந்த சேரர் மரபு இன்று என்ன நிலையில் உள்ளது ? மீன் கொடியே பறக்கும், வில் கொடியே பறக்கும், வேறு கொடி பறக்க முடியாது என்று அவர்கள் கொண்டிருந்த உறுதி என்ன ஆயிற்று ?

**சேனைத் :** அவர்களின் வழியில் வந்தவர்கள் வீரம் குறைந்து போனார்கள்.

**சோ :** அந்த நிலைமை சோழர் குடியில் என் பேரனுக்குப் பின் வருவோரில் ஏற்பட்டால்—.

**சேனைத் :** ஏற்படவே ஏற்படாது. (சோர்வுடன்) ஏற்படாது என்று நம்புகிறேன் அரசே !

**சோ :** நன்றாக எண்ணிப் பாரும். கரிகாலனுக்குப் பிறகு இந்தச் சோழர் குடியிலேயே எவ்வளவு இரக்கம் ஏற்பட்டது ! எவ்வளவு வீழ்ச்சியும் ஏற்பட்டது. அந்த நிலைமை இன்னும் நூறு இருநூறு ஆண்டுகளுக்குப் பிறகு—.

**சேனைத் :** அரசே ! உங்கள் திருவாயால் அதைச் சொல்ல வேண்டா.

**சோ :** அஞ்சுவதில் பயன் இல்லை. அஞ்சுவதால் உண்மை ஒளிந்துகொள்ளாது. உண்மையை யாராலும் மாற்ற முடியாது.

**சேனைத் :** ஆம்.

**சோ :** நான் ஏன் இதைச் சொல்கிறேன், தெரியுமா ?

**சேனைத் :** தெரியவில்லை, அரசே.

**சோ :** நீர் என் சேனைத் தலைவராக வந்து எத்தனை ஆண்டுகள் ஆயின ? இந்தக் காலத்தில் நடத்திய போர்கள் எத்தனை எத்தனை ? நாம் அந்தப் போர்க்களங்களில் உருட்டிய தலைகள் எத்தனை ? நம்மால் கொல்லப்பட்ட சிற்றரசர்கள், சேனைத் தலைவர்கள் எத்தனை பேர் ! மனக் கண்ணால் பாரும். இரத்த வெள்ளத்தில் எக்களித்து நின்றோம். பெருவீரர்களின் மலை போல் உடம்புகளைக் கொன்று குவித்தோம். அதில் ஒரு மகிழ்ச்சி கொண்டோம். மதில்களை அழித்தோம். ஊர்களைக் கொளுத்தினோம்.

மங்கையரின் அலறலைக் கேட்டு மகிழ்ந்தோம். மக்களின் கூக்குரலைக் கேட்டுக் களித்தோம். வெற்றி வெற்றி என்று வெறி கொண்டு ஆரவாரம் செய்தோம். இவ்வளவும் ஏன்? ஏன்? பிறர் நாட்டில் நம் கொடி பறக்க வேண்டும் என்ற ஆசையால். பிறரைவிட நாம் சிறந்தவர்கள் உயர்ந்தவர்கள் என்ற ஆசையால். ஆனால், நாமே இந்த உலகத்தின் நிலையான தலைவர்களா? இறைவன் ஒருவன் இருக்கிறான். அவன் இதே வெற்றியையும் வெறியையும் மற்றவர்களுக்கு அளிக்கும் காலம் வரும்போது எல்லாம் மாறுகின்றன; தலை கீழ் ஆகின்றன.

(ஏவலாள் வந்து எதிரே நிற்கிறான்) என்ன செய்தி!

**ஏவலாள் :** மருத்துவர் வந்திருக்கிறார். மருந்து உண்ணும் நேரம் ஆயிற்றாம்.

**சோ :** கவலை இல்லை. இன்னும் ஒரு நாழிகை பொறுக்கலாம். இப்போது உடம்பு நன்றாக இருக்கிறது என்று சொல். (ஏவலாள் போகிறான்).

**சேனைத் :** என் அறிவே கலங்குகிறது. எனக்கு ஒன்றும் விளங்கவில்லை.

**சோ :** நெடுங்காலமான வழக்கத்திற்கு மாறாக உண்மையின் ஒளி வீசும்போது, அறிவு கலங்குவது போல் தோன்றும். அறிவு கலங்கவில்லை. மனம்தான் திகைக்கிறது. இருக்கட்டும்.

**சேனைத் :** அப்படியானால் நீங்கள் நடத்திய போர்கள்—?

**சோ :** எல்லாம் அறியாமையால் நிகழ்த்திய செயல்கள். உலக வரலாற்றில் சில ஏடுகள்! அவை மாறிய பிறகு உண்மை எல்லார்க்கும் தெரியும்.

**சேனைத் :** இளவரசர்க்கும் சொன்னீர்களா?

**சோ :** இல்லை. சொல்லும் எண்ணம் இல்லை. சொன்னாலும் பயன் இல்லை. இரண்டு வாரத்திற்கு முன் எனக்கு யாரேனும் சொல்லியிருந்தால் நானே உணர்ந்திருக்க மாட்டேன். இராசாதிராசனும் இப்போது உணர முடியாது. புலவர்கள் பாடிய பாட்டுக்கள், மக்கள் நம்பிய நம்பிக்கை—இவற்றிற்கு எதிரே உண்மை ஒளி வீசக் காலம் ஆக வேண்டும். விதை மரமாவதற்குச் சில ஆண்டுகள் ஆகும். புதுக்கருத்து, பழமையை மாற்றிப் பரவுவதற்குச் சில நூற்றுண்டுகள் ஆகும். பொறுத்திருப்போம்.

**சேனைத் :** அப்படிக் காலம் கடந்து வரப்போகும் கருத்தை இப்போது இந்த உடல்நிலையில் எண்ணுகிறீர்கள் வேந்தே!

**சோ :** நானு எண்ணுகிறேன்? அந்த உண்மை தானே வந்து ஒளிவீசினால் நான் என்ன செய்வது?

**சேனைத் :** எனக்கு ஒரே திகைப்பாக இருக்கிறது.

**சோ :** இப்போது அப்படித்தான் இருக்கும். அடுத்தபோர் வரும். அதில் இராசாதிராசனும் நீரும் பல கொலை புரிவீர்கள். பலர் கதறுவதைக் கேட்பீர்கள். பலருடைய வாழ்வைச் சாய்ப்பீர்கள். அப்போது நான் இன்று சொன்ன சொற்கள் உம் நினைவுக்கு வரும். அன்று உணர்வீர்.

**சேனைத் :** உணராமல் இருந்தாலே நன்றாக இருக்கும். உணர்ந்தால் வாள் ஏந்த மனம் தயங்கும். சோழர் குடிக்கு என் செஞ்சோற்றுக் கடன் கழிக்க இடையூறு ஆகும். ஆகையால் உணராமலே நான் ஒரு போர் வீரனாகத் தொண்டு புரிந்து சோழர் குடிக்காக இரத்தம் சிந்திச் சாக வேண்டும். இதுதான் என் ஆசை.

**சோ :** உணரும் காலம் வந்து விட்டால், இந்த ஆசை தானே பறந்து போகும். அது போகட்டும். இன்று நான் உம்மோடு பேசுவது ஒரு வேண்டுகோளுக் காகவே.

**சேனைத் :** வேண்டுகோள் அல்லவே அல்ல. (செவி புதைத்து) ஆணை என்று சொல்லுங்கள் அரசே !

**சோ :** என் மகன் இராசாதிராசனுக்கு இயற்கையாகவே உள்ள போர் வெறி போதும். அதை நீர் மேலும் தூண்டிவிடா திருக்க வேண்டும்.

**சேனைத் :** அவ்வாறே செய்வேன் அரசே ! ஆனால் —

**சோ :** தயங்காமல் சொல்வீராக.

**சேனைத் :** இளவரசர் என்னைப் பற்றித் தவருக எண்ணக் கூடுமே !

**சோ :** கடமையைச் செய்யும். போர்க்களத்தில் வெட்டிக் குவியும். வீரர்களையும் ஏவி போர் நடத்தும். வேண்டா என்று கூறவில்லை. ஆனால், இராசாதிராசனுக்குப் பலவாறு சொல்லிச் சொல்லிப் பகை வெறி ஊட்ட வேண்டா.

**சேனைத் :** அவ்வாறே செய்வேன் அரசே !

**சோ :** நீர் எத்தனை முறை என் செவியில் பகைவரைப் பற்றிச் சொல்லிச் சொல்லி என் நெஞ்சில் கொதிப்பு எழச் செய்திருக்கிறீர் !

**சேனைத் :** ஆம். செய்தது உண்டு.

**சோ :** இனி என் மகனிடத்தில் அதைச் செய்யாமல் இருந்தால் போதும்.

**சேனைத் :** நான் வேண்டுமென்றே பொய்யாக நடித்துச் செய்யவில்லை அரசே ! உள்ளம் உணர்ந்த உணர்ச்சி யையே உங்களிடம் எடுத்துரைத்தேன்.

**சோ :** போனது போகட்டும், இன்னென்று சொல்கிறேன். உணர்ந்து பாரும். பாண்டியரும் சேரரும் நம்மேல் அன்பு இல்லாதவராக உள்ளனர். நாம் நடத்திய போர்களும் அழிவுகளுமே அதற்குக் காரணம். ஒருகால், அவர்கள் சோழர்குடியோடு உறவு கொண்டு பழக வாய்ப்புக் கிடைத்தால், அந்த வாய்ப்பை நெகிழ விடக் கூடாது. அந்த நட்பு வளர்வதற்கு நீர் குறுக்கே நிற்கக் கூடாது.

**சேனத் :** நல்லது ; உங்கள் கட்டளைப்படியே, வேந்தே!

**சோ :** இதை இளவரசர்க்கு இப்போது சொல்லுதல் கூடாது. காலம் வரும்போது தானே உணரட்டும். சரி. நீர் போகலாம், எல்லாம் நெஞ்சில் இருக்கட்டும்.

**சேனத் :** அரசர்க் கரசே ! வணக்கம்.

(ஏவலாள் வருகிருன்)

**சோ :** மருத்துவரை வரச்சொல்.

## காட்சி - 2

*கங்கைகொண்ட சோழபுரத்தில் அமைச்சர் வீடு.*
*கி. பி. 1044. காலை நேரம்.*

[அமைச்சரும் சேனைத்தலைவரும் பேசிக்கொண் டிருக்கிறார்கள்.]

**அமைச்சர் :** வேந்தர் இவ்வளவு சோர்வாக எப்போதும் இருந்ததில்லை.

**சேனைத்தலைவர் :** ஆமாம். மிக மிகச் சோர்வாக இருக்கிறார். உடல்நிலைதான் காரணம்.

**அமைச் :** உடல்நிலை, உடல்நிலைதான். உள்ளம் தளர்ந்தது என்று கூற முடியாது. அது எப்போதும் எஃகு உள்ளம்தான்.

**சேனைத் :** அந்த எஃகு உள்ளத்திலும் சிறு சோர்வு வந்திருப்பதாகவே தெரிகிறது.

**அமைச் :** அப்படியா? இருக்காது, இருக்க முடியாது.

**சேனைத் :** அரசர் பேசும் பேச்சுக்களால் உணர்கிறேன்.

**அமைச் :** என்னிடம் பேசியபோதெல்லாம் பழைய நெஞ்சுறுதியையே உணர்ந்தேன். புலிக்கொடியைத் திக்கெங்கும் நாட்டும் பெரு வேந்தரின் வழித்தோன்றல் அல்லவா ?

**சேனைத் :** அந்த வகையில்தான் எனக்கு ஐயப்பாடு உள்ளது. இப்படிச்சொல்வது குற்றம். மன்னிக்கவேண்டும்.

**அமைச் :** நமக்குள் பேசிக் கொள்ளலாம், சொல்லும். தயங்க வேண்டா. நான் எவரிடமும் சொல்ல மாட்டேன். (சுற்றிலும் பார்த்து) சொல்லும் அய்யா !

**சேனைத் :** வேந்தர் இராசேந்திர சோழருடைய பெருமையையோ வீரத்தையோ குறைகூறும் நோக்கமே எனக்கு இல்லை.

**அமைச் :** அதை நான் நன்றாக அறிவேன். என்னிடம் சொல்ல வேண்டுமா ? சேனைத்தலைவர் எப்படிப்பட்டவர் என்பதை அரசர் அறிவார் ; நாடு அறியும்.

**சேனைத் :** இப்போது அரசரை இந்த நிலையில் கண்டபோது, என் கண்கள் கலங்கின. நெஞ்சு குமுறியது.

**அமைச் :** என்ன செய்வது ?

**சேனைத் :** இந்த நிலையிலும் அவருடைய பார்வையிலும் பேச்சிலும் இருந்த அஞ்சாமையை என்ன என்பது ?

**அமைச் :** ஏதோ சோர்வு கண்டதாகச் சொன்னீர். இப்போது அஞ்சாமை என்கிறீர்.

**சேனைத் :** அஞ்சாமை, அஞ்சாமைதான். அது வேறு. சோர்வும் இருந்தது. அது வேறு. பகைவர்களைப்பற்றிக் கவலைப் படாத அஞ்சாமை, பொருட்படுத்தாத அஞ்சாமை. ஆனால் போர் என்றால் ஆர்வம் காட்டுவதுபோய், எதற்காகப் போர் என்று கேட்கும் சோர்வு.

**அமைச் :** வேந்தர் உடல்நலம் இல்லாமல் படுக்கையாய்ப் படுத்துள்ள இந்த நிலையில் போரைப் பற்றி நீர் பேசலாமா ? என்ன செய்தீர் அய்யா ?

**சேனைத் :** நான் பேசுவேனா ? நானாகச் சொல்லவில்லை. அவரே சொன்னார்.

**அமைச் :** என்ன சொன்னார் ?

**சேனைத் :** என்னைப் பார்த்துப் புன்சிரிப்புச் சிரித்து, 'என்ன அய்யா ! நம் படைகள் எப்படி இருக்கின்றன ?

எங்காவது போருக்குப் போக வேண்டும் என்ற நினைவு ஏற்பட்டிருக்கிறதா? உமக்கும் அந்த ஆசை இருக்குமோ' என்றார்.

**அமைச் :** பார்த்தீரா ? அப்படி இருக்கும்போது சோர்வு கண்டதாகச் சொல்கிறீரே !

**சேனைத் :** அந்தச் சிரிப்பின் பொருள் அதுதான்.

**அமைச் :** எது ?

**சேனைத் :** முன்னெல்லாம் இருந்த பைத்தியம் இப்போதும் இருக்கிறதா என்று கேட்பது போல் சிரித்தார்.

**அமைச் :** அது நீங்களாகக் கருதுவது. தவறு.

**சேனைத் :** இல்லை இல்லை. உண்மையாக அறிந்துதான் சொல்கிறேன். அவர் கேட்டதற்கு விடை கூறாமல் நின்றேன். சிறிது கழித்து, அவரே மீண்டும் கேட்டார். வேந்தர்பெருமானின் உடல் தேறட்டும், பிறகு அதைப் பற்றி எண்ணலாம் என்று கூறினேன்.

**அமைச் :** அதுதான் சரி. இப்போது ஏன் அந்தப் பேச்சு ?

**சேனைத் :** அப்போது அரசரே கேட்டார். 'உடல் தேறிய பிறகு, பாண்டியன்மேல் படையெடுக்கலாம் அல்லவா' என்று கேட்டார்.

**அமைச் :** பார்த்தீரா ? பிறகு, நீர் சொன்னது...?

**சேனைத் :** அவருடைய குறிப்பை உணராமல், ஆம் என்றேன். சிரித்தார். திகைத்தேன். இன்னும் பாண்டியர் மேல் படையெடுத்து அழிக்க வேண்டும் என்ற ஆசை உள்ளது அல்லவா என்று திடுக்கிடும்படியாகக் கேட்டார். மறுமொழி கூறாமல் நின்றேன். 'சேனைத் தலைவரே ! வாழ்நாள் எல்லாம் பிறர்மேல் படையெடுப்பதுதான் தொழிலா ? பகைத்தவர் நாட்டைப் பாழாக்குவதுதான் கடமையா ? இந்தத் தொழிலில் இன்னும்

சலிப்பு வரவில்லையா?' என்றார். வேந்தரின் கட்டளைப் படி என்று கூறி அமைதியானேன்.

**அமைச் :** பாண்டியர்மேல் இரக்கம் தோன்றிவிட்டதோ?

**சேனைத் :** இரக்கம் என்பது அல்ல. வீணாக ஏன் போர் செய்ய வேண்டும் என்று எண்ணுகிறார்.

**அமைச் :** எது வீண்? எப்படி வீண்? போர் செய்வதை வீண் என்று சொல்வதா? அரசர்க்கு உரிய முதல் கடமை அதுதானே? அது எப்படி வீண் ஆகும்?

**சேனைத் :** நான் சொல்லவில்லை. அரசரும் சொல்லவில்லை. அப்படிப்பட்ட கருத்து இருப்பதாகச் சொன்னேன்.

**அமைச் :** என்ன அய்யா, வளைத்து வளைத்துப் பேசுகிறீர்?

**சேனைத் :** அமைச்சரிடம் பேசும்போது முன்னும் பின்னும் நோக்கி விழிப்பாகப் பேச வேண்டுமே?

**அமைச் :** சரி, போகட்டும். தொடர்ந்து என்ன சொன்னார்?

**சேனைத் :** பாண்டியரை வேண்டுமென்றே எதிர்ப்பதும் போர் செய்வதும் வேண்டா என்றார். அவர்களை அவர்களின் நாட்டில் வாழ விடவேண்டும் என்றார்.

**அமைச் :** உண்மை அல்ல, உண்மை அல்ல. ஏதோ காரணமாக அப்படிச் சொல்லியிருக்கிறார். உம்முடைய மனத்தின் ஆழத்தைக் காண்பதற்காகச் சொல்லி யிருக்கிறார்.

**சேனைத் :** மேலும் கேளும். இளவரசர்க்கு இத்தகைய வெறிகளை ஊட்டக் கூடாது என்றும் சொன்னார். மனத்திலே வைத்துக்கொள்ளும். இதை நாட்டில் யாரும் அறியக் கூடாது. பகைவரான பாண்டியர் செவிக்கு இது எட்டக் கூடாது.

**அமைச் :** (இரு செவிகளையும் பொத்திக்கொண்டு) அந்தோ! என்னால் இதை நம்பவே முடியவில்லையே!

**சேனைத் :** அது மட்டும் அல்ல. பாண்டியரோடு உறவு கொண்டு நட்பாக இருக்கக் கூடிய வாய்ப்புக் கிடைத்தால், அதற்கு நான் எந்த வகையிலும் குறுக்கே நிற்கக் கூடாது என்று எனக்குக் கட்டளை இட்டார். இப்படி வேந்தர்களுக்குள்ளும் வேளிர்க்குள்ளும் பகை இருந்துவந்தால், வெளிநாட்டார் இங்கே புகுந்து வேரூன்றுவதற்கு வழி ஆகிவிடும் என்றும் குறிப்பிட்டார்.

**அமைச் :** என்ன ? புலிக்கொடி பறக்கும் அரண்மனையிலா இப்படி ஒரு பேச்சு நிகழ்ந்தது ? தமிழ் நாட்டில் வெளி நாட்டார் புகுவதா ? புகுந்து வேரூன்றுவதா ? சோழர் மரபு—சோழரின் புலிக்கொடி—உள்ள நாட்டில் வேற்று நாட்டார் ஆட்சி புகுவதா ? இப்படி ஒரு கனவு காண்பதும் நம் வீரத்துக்குப் பொருந்தாதே ! அரசர் பெருமான் வாயால் இந்தச் சொல் வந்ததா ? அவருடைய மனம் அவ்வளவு மாறக் காரணம் என்னவோ ? உடல் அவ்வளவு தளர்ந்து போனதா? மருத்துவரைக் கண்டு கேட்க வேண்டும். ஒரு வேண்டுகோள். இதை நீர் ஒருவரிடமும் வெளியிடக் கூடாது. நாட்டுக்கே தீமையாக முடியக் கூடியது இது. ஆகையால்—

**சேனைத் :** இறுதியில் அரசரே இந்தக் கட்டளையும் கூறினார். இளவரசர்க்கும் இதைச் சொல்லக் கூடாது என்றார். இளவரசரே உணரக் கூடிய வாய்ப்பு வரும் போது, அவருக்குத் துணையாக இருந்து உதவுமாறு கூறினார்.

**அமைச் :** இந்தப் பேச்சு நடந்தபோது அங்கே வேறு யாரேனும் இருந்தார்களா ?

**சேனைத் :** ஒருவரும் இல்லை. ஆனால் அடுத்த முறை நீர் அரசரைக் காணும் போது, அவரே உம்மிடம் கூறுவார்.

**அமைச் :** நல்லது. பொறுப்புப் பெரியது. சிந்தனை செய்வோம். காரணம் காண்போம்.

**சேனைத் :** விடை பெறுகிறேன். வணக்கம்.

**அமைச் :** வணக்கம். வெல்க புலிக் கொடி !

**சேனைத் :** வெல்க, வெல்க! என்றென்றும் புலிக்கொடி வெல்க !

## காட்சி : 3

கங்கை கொண்ட சோழபுரத்து அரண்மனை.
கி. பி. 1044. மாலை வேளை.

[சோழ வேந்தன் முதலாம் இராசேந்திரன் கட்டிலில் சாய்ந்து படுத்தவாறு கோப்பெருந்தேவியிடம் உள்ளச் சோர்வுடன் தன் உடல் நிலை பற்றிப் பேசுதல்.]

**கோப்பெருந்தேவி :** நீங்கள் இவ்வளவு மனம் தளர்ந்து பேசியதை நான் இதற்கு முன் ஒருநாளும் கேட்டது இல்லையே. (முகத்தில் சோர்வு, கண்களில் கலக்கம்.)

**சோழன் :** உண்மைதான். நானே உணர்கிறேன். எனக்கும் வயது ஆயிற்று. அரசனாக இருந்தாலும் முதுமையும் மரணமும் உண்டு அல்லவா?

**கோப் :** (இரு செவிகளையும் பொத்திக்கொண்டு) சொல்லாதீர்கள், அந்தச் சொல்லைச் சொல்லாதீர்கள்.

**சோ :** மரணம் என்ற சொல்லுக்கா அஞ்சுகிறாய்? அய்யோ பேதையே!

**கோப் :** நான் பேதைதான்!

**சோ :** நான் எத்தனை வீரர்களின் சாவைக் கண்ணால் பார்த்திருக்கிறேன்! எத்தனை போர்களை நடத்தியிருக்கிறேன்! என் காலத்துப் போர்கள் மட்டும் அல்ல, என் தந்தை இராசராச சோழர் காலத்துப் போர்களில் பெரும்பங்கு என் பங்குதானே!

**கோப் :** அப்படிப் போர்கள் பல நடத்திய நீங்கள் இப்போது ஏன் தளர்ந்த மனத்தோடு பேசுகிறீர்கள் ?

**சோ :** மரணம் வருகிறதே என்ற பயத்தால் அப்படிப் பேசியதாக நினைத்து விட்டாயோ ! அடி பேதையே ! என் மனத்தை நீ உணர்ந்துகொள்ளவில்லை !

**கோப் :** (கண்களைத் துடைத்துக்கொண்டு) பிறகு ஏன் கலங்குகிறீர்கள் ! என் மனத்தையும் கலக்கிவிட்டீர்களே !

**சோ :** (தணிந்த குரலில்) மரணம் பற்றிய பயமே எனக்கு இல்லை ! உனக்கும் இருக்கக் கூடாது ! என் உடம்பு தளர்ந்துவிட்டது ! இறுதிப் படுக்கையில் படுத்து விட்டது ! ஆனால்—!

**கோப் :** ஆனால் என்ன ? மகன் இராசாதிராசனைப் பற்றிக் கவலைப் படுகிறீர்களா ?

**சோ :** அவனைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும் ! அவனும் என்னைப் போல், புலி வயிற்றில் பிறந்த புலியே. நம் கொடியின் பெருமையைக் காக்கும் புலி. ஆனால்—!

**கோப் :** (கணவரின் கன்னங்களைத் தடவியவாறே) என்னிடத்தில் சொல்லக் கூடாத அரசியல் சிக்கலா ? மகனை வரச் சொல்லட்டுமா ?

**சோ :** வேண்டா, வேண்டா. உன்னிடத்திலேயே சொல்வேன். சொல்கிறேன். இந்தப் படுக்கையிலும் என் மனத்தின் வேகம் அடங்கவில்லை. நான் இளமை முதல் செய்த போர்கள் ஒவ்வொன்றாக நினைவுக்கு வருகின்றன; பெற்ற வெற்றிகள் ஒவ்வொன்றாக நினைவுக்கு வருகின்றன. தந்தை இராசராசர் காலத்தில் நான் செய்த பெருஞ் செயல்களும் நினைவுக்கு வருகின்றன. என் முப்பத்து மூன்று ஆண்டுகளின் ஆட்சிக் காலத்துப் பெருஞ் செயல்களும் நினைவுக்கு வருகின்றன.

(சிறிது இருமல், பெருமூச்சு.) எல்லாம் பயனற்றவை, எல்லாம் வீண் என இப்போது தோன்றுகின்றன.

**கோப் :** (முகம் மாறுதல்) உங்கள் வீர நெஞ்சத்திலா இப்படிப் பட்ட எண்ணம் தோன்றுவது ?

**சோ :** ஆம் ! தோன்றுவது விந்தைதான் ! எனக்கே விந்தையாக இருக்கிறது ! யானையும் தேரும் குதிரையும் திரட்டி, குடும்பங்களைப் பிரிந்து வருமாறு வீரர்களைத் திரட்டிப் பெரிய படை என்று செருக்குக் கொண்டு, எதிர்த்த நாடுகளை அழித்தேன். பணிந்த நாடுகளை விட்டேன். இதுதான் வீரமா என்று இப்போது எண்ணிப் பார்க்கிறேன் ! இப்படிப்பட்ட வீரம் வேண்டுமா என்று என் நெஞ்சம் கேட்கிறது ! என் மகன் — இளவரசன் — இராசாதிராசனுக்கும் இதே கல்வியைக் கற்பித்துச் செல்ல வேண்டுமா என்று என் நெஞ்சம் கேட்கிறது. அதனால்தான் பெருமூச்சு விட்டேன் !

**கோப் :** என்ன சொல்கிறீர்கள் ?

**சோ :** உண்மைதான் சொல்கிறேன். நீ எனக்கு ஆரத்தி சுற்றி விடைகொடுத்து அனுப்பிக்கொண் டிருந்தாய் ! நானும் ஒவ்வொரு நாடாகப் படையெடுத்து அழித்து வாகைமாலை சூடி அரண்மனைக்குத் திரும்பி வந்து உன்னை மகிழ்வித்தேன். மருமகளும் மகனும் நம்மையே பின்பற்றி நடக்க வேண்டுமா ? இதுதானா அரசியல் ! என் படையில் மாண்ட பெருவீரர் எத்தனை பேர் ? எதிரிகளின் படையில் மாண்டவர் எத்தனை பேர் ? அவர்களின் மனைவியர் — உன்னைப் போல் ஆரத்தி சுற்றி அனுப்பிய பெண்கள் — இட்ட கண்ணீர் எவ்வளவு ! போர்க்களத்தில் செந்நீரைப் பெருக்கினேன் ! மங்கல வீடுகளில் கண்ணீரைப் பெருக்கினேன் !

**பணிப் பெண் :** மன்னர் மன்னரே ! அமைச்சரும் சோதிடரும் வந்திருக்கிறார்கள்.

**சோ:** வரச் சொல். முன்னே சோதிடரை வரச் சொல் [கோப்பெருந் தேவியைப் பார்த்துப் போகுமாறு சைகை செய்கிறான். கோப்பெருந்தேவி நீங்கியவுடன் சோதிடர் வருகிறார்.

**சோதிடர்:** மன்னர் பெரும!

**சோ:** வருக. (இருக்கையில் அமருமாறு சைகை செய்கிறான்.) பார்த்தீர்களா? விளக்கம் வேண்டா. விரிவாகச் சொல்ல வேண்டா. சுருக்கமாகச் சொன்னால் போதும்.

**சோதிடர்:** இந்த மாதம் 27-ஆம் நாள் வரையில் கிரகங்கள் நன்றாக இல்லை. ஆனால் தங்கள் சோழ குலத்தின் முதல்வனாகிய சூரியனுடைய உதவியால், அந்த நெருக்கடி தீர்ந்துவிடும். அதன் பிறகு —

**சோ:** போதும்! அந்தக் குறிப்பைத் தெரிந்துகொண்டேன்.

**சோதிடர்:** வேறு எந்தக் கவலைக்கும் இடம் இல்லை, அரசே!

**சோ:** போதும், உணர்ந்துகொண்டேன். (மணியை அடிக்கிறான். ஏவலாள் ஒருவன் வந்து நிற்கிறான்.) கொண்டு வா, பரிசு. (சிறிது அமைதி, ஏவலாள் தட்டு நிறையப் பூவும் பழமும் இடையே சில பொற்காசும் வைத்துக் கொண்டுவருகிறான். அதைக் கையால் தொட்டுச் சோதிடரிடம் தருமாறு குறிப்புச் செய்கிறான் சோழன். சோதிடர் அதைப் பெற்று வணக்கம் தெரிவித்து நீங்குகிறார்.) அமைச்சர் வரலாம்.

**அமைச்சர்:** (கலக்கத்துடன் வந்து நின்று கை குவிக்கிறார்.) நேற்றிருந்து கடாரத்துத் தூதுவன் வந்து காத்திருக்கிறான். அரசர்பெருமானை இப்போது காணமுடியாது என்று சொன்னேன்.

**சோ:** நல்லது அமைச்சரே! என் கருத்து அதுதான்.

**அமைச்:** கடாரத்து மன்னன் கொடுத்தனுப்பிய திறைப் பொருள் —?

**சோ :** அவற்றை என் கண்களால் காண வேண்டா.

**அமைச் :** இன்னும் ஒன்று உண்டு.

**சோ :** என்ன? சொல்லலாம்.

**அமைச் :** அரசியல்!

**சோ :** அரசியலாக இருந்தாலும் எதுவாக இருந்தாலும் சொல்லலாம். எதுவும் என் மனத்திற்கோ உடம்புக்கோ தீமை செய்ய முடியாது. தயங்காமல் சொல்லலாம்.

**அமைச் :** பாண்டியர் மறுபடியும் —

**சோ :** பூசலும் கலகமும் எதிர்ப்பும் செய்வார்கள். இயற்கைதான்! தந்தை இராசராசர் தம் காலத்தில் பாண்டியரை வென்றார். மறுபடியும் என் ஆட்சியில் துளிர்த்தார்கள். நானும் வென்று அடக்கினேன். இப்போது என் உடல் தளர்ச்சியைத் தெரிந்துகொண்டிருப்பார்கள். மகன் இராசாதிராசனும் தன் காலத்தில் அவர்களின் எதிர்ப்பைத் தாங்கவேண்டி வரும். வீண்வம்பு! விட்டுவிடுங்கள்!

**அமைச் :** ஈழத்தை வென்ற வேந்தரா இப்படிப் பேசுவது?

**சோ :** ஈழத்தை வென்றேன்! என்ன வெற்றி அது! ஈழமன்னன் மகிந்தனை நம் நாட்டுக்கே கொண்டுவந்து பணியச் செய்தேன். அடிமை போல் வாழ்ந்தான். அவன் இறந்தபின் என்ன ஆயிற்று? அவன் மகன் காசிபன் அங்கே முடிசூட்டிக்கொண்டான். சேரனும் பாண்டியனும் அவனுக்குத் துணை செய்தார்கள்! இனி மகன் இராசாதிராசனும் அங்கே போர்புரிந்து வெல்ல வேண்டுமா? வீண் வேலை!

**அமைச் :** (கலங்கி) கங்கை கொண்ட சோழரா இப்படிப் பேசுவது? கடாரம் வென்றவரா இப்படிப் பேசுவது? உலகை ஒரு குடைக்கீழ்...

**சோ :** போதும், போதும் அந்தப் பழங்கதை! புலவர்கள் திரும்பத் திரும்பப் பாடி மன்னர்களின் மனத்தை மயக்கியது போதும். வீரம் என்றும், நிலமகள் என்றும், வெற்றித்திரு என்றும், ஒரு குடை என்றும் அமைச்சர்கள் சொல்லிச் சொல்லி மன்னர்களின் மனத்தைக் கிளறியது போதும்! சேரனுடைய முன்னோரிலும் இமய வரம்பன் என்று ஒருவன் இருந்தான்! அவன்மகன் செங்குட்டுவன் இமயம் வரை போர் புரிந்து வென்றான். இன்று அந்த மரபில் வந்த சேரனுடைய நிலைமை என்ன? எனக்கு அஞ்சி நடுங்கி ஒதுங்கி வாழ்கிறான். இதே நிலைமை, என் பேரனுக்கோ, பேரனுடைய பேரனுக்கோ நேர்ந்தால் வியப்பு இல்லையே! ஆகையால் இது வீண் பெருமைதானே? வீண் முயற்சிதானே?

**அமைச் :** அரசர்க்கரசே! தங்கள் மனம் இப்படி மாறக் காரணம் என்னவோ? எனக்கு இது பெரிய —

**சோ :** இந்த மன மாறுதலுக்காக வருந்தக் கூடாது; மகிழ்ச்சி அடைய வேண்டும் அமைச்சரே!

**அமைச் :** சேரரும் பாண்டியரும் இதை உணர்ந்தால் — !

**சோ :** சோழ நாட்டுக்கு ஆபத்து என்று எண்ணுகிறீர்களா? ஒரு நாளும் இல்லை. அவர்களுடைய மண்ணை அவர்கள் பயம் இல்லாமல் ஆள்வார்கள். அவ்வளவு தானே?

**அமைச் :** அரச நீதி!

**சோ :** இதுவரையில் நான் உணர்ந்தது, நீங்கள் உணர்த்தியது எல்லாம் அரசநீதி அல்ல, அநீதி! நாட்டை ஆளக் கிடைத்த வாய்ப்பு, மற்ற நாட்டை அழிக்கக் கிடைத்த வாய்ப்பு ஆகாது!

**அமைச் :** திருவள்ளுவர் அரசியலில் — !

**சோ :** பிறர்மனே நயவாமை என்று அறத்துப் பாலில் எழுதியவர், பிறர்மண் நயவாமை என்று பொருட் பாலில் எழுதவில்லையே என்றுதான் வருந்துகிறேன்.

**அமைச் :** (மிகக் கலங்கி) நம் நாட்டின் எதிர்காலம் !

**சோ :** அது நம் கையில் இல்லை !

**அமைச் :** மற்ற நாட்டு அரசர்களும் உங்களைப் போல் உணர்ந்தால் நல்லது ! அவர்கள் உணர மாட்டார் களே ! சோழரின் புலிக் கொடி சீற்றம் தணிந்தது என்று அவர்கள் அறிந்தால் —

**சோ :** என்ன ஆகும் ?

**அமைச் :** சோழர் மண்ணைக் கவர வேண்டும் என்று படையெடுத்தால் — !

**சோ :** சோழர் படை தடுக்கட்டும். அழிக்க வேண்டா.

**அமைச் :** புலி பசு ஆயிற்று என்று பிறர் அறிந்தால் — !

**சோ:** புலி புலியாகச் சீறிச் சீறிக் கண்டது என்ன ?

**அமைச் :** (சிறிது நேரம் பேச்சின்றிக் கலங்கிச் சோர்ந்து) மன்னர் மன்னவ ! ஒரு வேண்டுகோள் ! இந்தப் புதிய சிந்தனையை இளவரசரின் செவியில் விழாமல் வைத்துக் கொள்ள வேண்டுகிறேன். நாட்டின் நன்மைக்காக வேண்டுகிறேன்.

**சோ :** இந்தக் கவலை உங்களுக்கு வேண்டா ? இந்தப் புத்துணர்ச்சி எளிதில் வராது ! இராசாதிராசனும் என்னைப் போலவே போர் பல நடத்துவான். புலிக் கொடி சீற்றத்துடன் இன்னும் சில தலைமுறை பறக்கும் !

**அமைச் :** (இரு செவியும் பொத்திக்கொண்டு) சில தலைமுறை தானா ? உலகம் உள்ளவரையில், சோழர்குல முதல்வன் சூரியன் உள்ள வரையில் புலிக் கொடி சீற்றத்துடன் பறக்கும் !

**சோ :** வீண் கனவு! வீண் பெருமை! (இருமல்) சரி! எவ்வாருே ஆகட்டும்! இளவரசர்க்குச் சொல்லவில்லை. சொல்லப் போவதில்லை. சொன்னாலும் பயன் விளையப் போவதில்லை. நடப்பது நடக்கட்டும்! என் வாழ்வின் முடிவில்தான் நான் உணர்ந்தேன்! காலம் வரும் போதுதான் உண்மையை உணர முடியும். சொல்லி உணர்த்த முடியாது.

**அமைச் :** (கண்களில் நீர் கலங்கக் கை குவித்து) அரசே!

**சோ :** மீண்டும் வேண்டிக்கொள்ளத் தேவை யில்லை. உறுதிமொழி கொடுத்தேன். இளவரசர்க்கு இதை உணர்த்த மாட்டேன். எனக்கு ஓய்வு வேண்டும். செல்லுங்கள். (அமைச்சர் விடை பெறுகிற வேளையில்) ஒன்று செய்யுங்கள்; இயற்கையைப் பாடிய பாட்டுக் களையும் இறைவனைப் பாடிய பாட்டுக்களையும் கேட்டு அமைதி பெற விரும்புகிறேன்.

**அமைச் :** தக்க இசைப் புலவரை அனுப்புவேன்.

**சோ :** நல்லது (கைகுவித்து அமைச்சருக்கு விடை தருகிருன். பிறகு, தனக்குள்) இமயம் முதல் ஈழம் வரையில்! உலகம் உள்ளவரையில் புலிக் கொடி! சீறும் புலிக் கொடி! இப்படியே, ஒவ்வொரு மன்னனும் எண்ணிஞல்...! வீண் கனவு! (இருமல்)

[எங்கிருந்தோ வீணை இசை கேட்கிறது. மாசில் வீணையும் என்ற பாட்டுப் பாடப் படுகிறது.]